தருமையாதீனக் குருமுதல்வர்



ஸ்ரீ குருஞானசம்பந்த சுவாமிகள்

உ

குருபாதம்

# ஸ்ரீ குருஞானசம்பந்தர் அருள்வாக்கு



கண்டேனிப் பாசங்
கழிந்தேன் அமுதைமுகந்
துண்டேன் சுகானந்தத்
துள்ளிருந்தேன் —
வண்டிமிர்காத்
தேனைப் பொழிகமலைச்
செங்கமலப் பொற்பாத
ஞானப்ர காசனையே
நான். (5)

ஆசிரியர் :-

வித்துவான்,

சோமசுந்தரத்தம்பிரான்சுவாமிகள்

துணையாசிரியர் :-

வித்துவான்,

சோ. சிங்காரவேலன், M. A.,

உ

குருபாதம்

# "ஞானசம்பந்தம்"

## தருமையாதீனத் திங்கள் இதழ்

மலர் 22 || 10-5-63 || இதழ் 6

## உட்பொருள்





### அட்டைப்பட விளக்கம்

தருமையாதீன ஸ்தாபகர்
ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்.
குருபூஜைத்திருநாள்
12-6-63.





உ

சிவமயம்

பெருங்கருணைத் தடங்கடலாகிய சிவபெருமான் ஆன்மாக்கள் மீதுவைத்த எல்லையிலாப் பெருங்கருணையினாலே, காணாத அருவினுக்கும் உருவினுக்கும் காரணமாய் நிகழ் குறியாம் சிவலிங்கமாதி திருவுருக்கொண்டு எழுந்தருளியிருக்கின்ற தலங்கள் பலவற்றுள் இந்திரன், அகத்தியர், தருமன், ஆகியோர்களால் பூசிக்கப் பெற்றதும் காவிரிமுதலிய தீர்த்தங்களால் சிறப்புற்றதும், வில்வாரண்யம் என்னும் சிறப்புத்திருநாமம் உற்றதும். குருபீடஸ்தானமும் ஆகிய தருமபுரத்தின்கண் திருக்கோயில்கொண்டு எழுந்தளியிருக்கின்ற **ஸ்ரீ ஞானம்பிகாசமேத ஸ்ரீ ஞானபுரீசுவர சுவாமிக்கு** நிகழும்சோபகிருது ஆண்டு வைகாசித்திங்கள் 20-வது நாள் (3—6—63) திங்கட்கிழமை தொடங்கி மகோற்சவம் நடைபெறும்.

திருநாட்களில் திருநெறிய தெய்வத் தமிழ் மாநாடும் இன்னிசை நிகழ்ச்சிகளும் நடைபெறும். சிவநேசச் செல்வர்கள் யாவரும் வந்திருந்து திருவிழாக்காட்சியைத் தினமும் தரிசித்தும் சொற்பொழிவுகளைக் கேட்டும் இன்புறுக.

திருக்கயிலாய பரம்பரைத்
தருமபுர ஆதீனம்
கார்பார்,

தருமையாதீன மடாலயம்.
சோபகிருது - சித்திரை 27

சொக்கநாதத் தம்பிரான்.

---

திருநெறிய தெய்வத் தமிழ் மன்றத்தில் 3—6—63 முதல் 13—6—63 முடிய உள்ள நாட்களில் மாலை 6-மணி முதல் சிறந்த அறிஞர்களின் சொற்பொழிவுகளும், இன்னிசை நிகழ்ச்சிகளும் நடைபெறும்.

பூஜைமடத்தில் 3—6—63 முதல் 12—6—63 முடிய உள்ள நாட்களில் காலை 10-மணிமுதல் 12 மணி வரை

**சிவஞானசித்தியார் பாடவகுப்பு**

தருமையாதீனத் தமிழ்ப் புலவர்,
வித்துவான், திரு. சி. அருணைவடிவேல் முதலியார்
அவர்களால் நடத்தப்பெறும்.

உ

# திருநாள் விபரம்.

| தமிழ் ஞஸ மீ உ | இங்கிலீஷ் உ மீ ஞஸ | வாரம் | திரு நாள் | உற்சவ விபரம் |
| --- | --- | --- | --- | --- |
| வைகாசீ 19 | 2—6—63 | பானுவாரம் | | சித்திராநக்ஷத்திரம் கூடிய சுபதினத்தில் உதயாதி 30-0 நாழிகைக்கு மேல் 33-30 நாழிகைக்குள் விருச்சிக லக்னத்தில் அனுக்ஞை, விக்நேஸ்வர பூஜை, வாஸ்துசாந்தி, மிருத்ஸங்கிரஹணம், அங்குரார்ப்பணம், ரக்ஷாபந்தனம். |
| 20 | 3—6—63 | சோமவாரம் | 1 | சித்திரை நக்ஷத்திரம் கூடிய சுபதினத்தில் உதயாதி 10-0 நாழிகைக்குமேல் 12-30 நாழிகைக்குள் காலை மணி 10 to 11 கடக லக்னத்தில் ஸ்ரீ ஞானம்பிகா சமேத ஸ்ரீ ஞானபுரீசுவரசுவாமிக்கு மஹோத்ஸவ துவஜாரோஹணம். |
| 21 | 4—6—63 | மங்களவாரம் | 2 | கற்பகவிருக்ஷக் காட்சி. |
| 22 | 5—6—63 | புதவாரம் | 3 | பூதம், பூதகி, இடும்ப வாகனக் காட்சி. |

சோபகிருது

| | | | | |
|---|---|---|---|---|
| 23 | 6—6—63 | குருவாரம் | 4 | நந்தி, காமதேனு, குதிரைவாகனக் காட்சி. |
| 24 | 7—6—63 | சுக்ரவாரம் | 5 | சகோபுர ரிஷப வாகனக் காட்சி. |
| 25 | 8—6—63 | ஸ்திரவாரம் | 6 | யானை. அன்னம், ஆட்டுக்கடா வாகனக் காட்சி. |
| 26 | 9—6—63 | பானுவாரம் | 7 | இரவு மணி 7 to 9 தனுர் லக்னத்தில் திருக்கல்யாண வைபவம், புஷ்ப விமானம், வெள்ளிரதக் காட்சி. |
| 27 | 10—6—63 | சோமவாரம் | 8 | குதிரை, கிளி, யானை வாகனக் காட்சி. |
| 28 | 11—6—63 | மங்களவாரம் | 9 | காலை மணி 9-45க்கு மேல் 11 க்குள் கடக லக்னத்தில் மகா ரதாரோஹணம். திருத்தேர். |
| 29 | 12—6—63 | புதவாரம் | 10 | காலை ஸ்ரீ சபாநாயகர் தீர்த்தம் கொடுத்தருளல். பிறகு பஞ்சமூர்த்திகளும் ரிஷபாருடராய் எழுந்தருளிக் காவிரியில் தீர்த்தங்கொடுத்தருளல். இரவு துவஜாவரோஹணம். |
| 30 | 13—6—63 | குருவாரம் | | மௌன உற்சவம். |
| 31 | 14—6—63 | சுக்ரவாரம் | | சண்டேசுரர் உற்சவம். |

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

குருபாதம்

## சிவபெருமான்

சீர்கொண்ட ஆனந்தமாகி எங்கும்
செறிவாகிப் பரமாகித் திரம தாகி
ஏர்கொண்ட கருணைத்திரு வுருவ மாகி
எழில்கொண்ட மலைமகளை இடத்திற் கொண்டோன்
கார்கொண்ட நிறங்கொண்ட முகுந்த னாதிக்
கடவுளர்வந் தடிபரவும் கடவுள் கொன்றைத்
தார்கொண்ட முடியனவன் அடியைத்தாழ்ந்து
தாழாத பெருங்கதியில் வாழா நிற்பாம்.

தருமையாதீனக்குருமுதல்வர்

## ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த சுவாமிகள்

சீரணியும் நுதலின்விழி மழுமான் நாகம்
திருந்தும்எரி பொருந்துவிடம் தெரிந்திடாமல்
தாரணி அன்பரையாள அவர்போல் வந்த
சைவசிகா மணிஎவர்க்கும் தலைவன் எங்கோன்
காரணியும் நெடியபொழிற் கமலை வேந்தன்
கருணைமழை பொழியும் இரு கடைக்க ணாளன்
பார்புகழும் ஞானசம் பந்தன் எந்தை
பரமன் இரு சரணமலர் பரவி வாழ்வாம்.

(சம்பந்த சரணாலயர்)

குருபாதம்

# ஆதி பரமாசாரியசுவாமிகள் சரிதம்

பாண்டியநாடு, சீவில்லிபுத்தூர், கார்காத்தார் (சைவ வேளாளர்) மரபு. தந்தையார் சுப்பிரமணியப்பிள்ளை, தாயார் மீனுட்சி அம்மையார். திங்கட்கிழமையில் தோற்றம். பிள்ளைத் திருப்பெயர் 'ஞானசம்பந்தன்'. கல்வியில் இளமையிலேயே பூரணர். பெற்றேர் தம் ஆன்மார்த்த மூர்த்தி ஸ்ரீ சொக்க லிங்கத்தை வழிபட மதுரைத் திருவாலவாய்க்குப் பிள்ளையொடு போந்தனர். திரும்பும் நாளில் அம்மையப்பர் ஆலவாயானும் அங்கையற்கண்ணியுமே, உடம்பிற்குத் தாய் தந்தையான உம் மோடு வாரேன் என்று மறுத்து, அவரை உளங்கொளச் சொல்லி விடுத்தார் மெய்யுணர் பிள்ளையார்.

நாள்தோறும் பொற்ருமரை முழுக்கு. வேளைதொறும் திருக் கோயில் வழிபாடு. ஒருநாள் அக்குளக்கரையில் அடியவர் புரியும் சிவபூஜையில் அழுந்திற்று அவர் உள்ளம்.

" தாவரிய அன்பினுல் சம்புவினை எவ்விடத்தும்
யாவர்களும் அர்ச்சிக்கும் படிகண்டால் இனிதுவந்து
பாவனையால் நோக்கினுல் பலர்காணப் பயன்பெறுவார்
மேவரிய அன்பினுல் மேலவர்க்கும் மேலானுர்."

(சேக்கிழார் சுவாமிகள்)

இதுபொய்யாமொழி. ஞானசம்பந்தர் சொக்கலிங்கத்தைவேண்டி னுர். இரவில் கனவில் அருளியவாறே, பொற்ருமரையின் வட கீழ் மூலையில், பெட்டகத்தொடும் அட்டமூர்த்தியைப் பெற்று நட்டம் ஆடினுர். இட்டமாப் பூசிக்க எண்ணுவரோ? சிவாகம விதிப்படி வழிபட விரும்பினுர். அது குறித்து ஆண்டவனை வேண்டினுர். கால்மாறினுன் அதற்குப் பால்மாறுவனே? திருவா ரூரில் ஞானப்பிரகாச முனிவரிடம் உபதேசமும் பூஜையும் ஏற்கப் பணித்தருளினுன். இருவர் கனவிலும் அதற்கேற்ற அருள் நிகழ்ந்தது.

திருவாரூரில் - சித்தீச்சரத்தில் தென்முகக் கடவுள் திருமுன் பக்குவசீடரை அருட்குரு எதிர்நோக்கியிருந்தார். அங்குச்சேர்ந்த பிள்ளையார், காந்தம்கண்ட இரும்பேபோல விரைந்துற்ருர். அபயம் பெற்ருர். சிவதீக்ஷையும் சிவபூஜையும் எய்தினர். நாள்தோறும் சொக்கலிங்கத்தைப் பூஜித்துப் பாடியதே சொக்கநாத வெண்பா. குரு தோத்திரமே ஞானப்பிரகாச மாலை,

ஒருநாள் பூங்கோயில் வழிபாடு. மடத்துவெளியே குருநாதர் 'நிற்க' என்றுபணித்தருளினர். குருவாணை கடவாதவர் ஆதலின் கைவிளக்கோடு நின்ருர். அசைந்தாரல்லர். மழையோ அவரைச் சுற்றி மூன்றடிக்கு அப்பாலேயே பெய்தது. குருபத்தினியார்க்கு விடியலில் அவ்வுண்மை தெரிந்தது. குருவும் அதுகேட்டுச் சென்று நோக்கி, உள்ளுருகி விழிநீர் பெருகி, அணுகித்தழுவி 'யாம் வணங்கும் கடவுள் வேறுண்டோ' என்று மொழிந்து, அதிதீவிர பக்குவியான உமக்கு, இனி இங்கு யாது உண்டு? நினைத்த இடத்தில்சென்று ஓடிவரும் காரணர்க்கு உபதேசம் புரிந்து, சமய பரிபாலனம் செய்க என்ருர். உவப்பத்தலைக் கூடியவர் உள்ளப் பிரியும் நிலையினரே ஆயினும்,

" கனக்கும் பொதிக்கும் எருதுக்கும் தன்இச்சை
கண்டதுண்டோ
எனக்கும் உடற்கும் எனதிச்சையோ? இணங்கார் புரத்தைச்
சினக்கும் கமலையுள் ஞானப்ர காச சிதம்பர இன்று
உனக்கு இச்சை எப்படி? அப்படிஆக உரைத்தருளே."

என்று வேண்டினர். தருமபுரத்திற்குச் செல்க எனப்பணித் தருளினர் கமலை முனிவர்.

குருவாணைப்படித் தருமபுரத்தை அடைந்தார். சைவ சமய பரிபாலனம் புரிந்துவந்தார். ஞான நூல்கள் பல அருளினர். ஆநந்தபரவசர் முதலிய பலரை ஞான பரம்பரையில் நிலவச் செய்தருளினர் தருமபுர ஆதீன மடாலயத்துக் குருமுதல்வர்.



12—6—63 புதன்கிழமை

ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்

# குருபூஜை விழா

காலை 10 மணிமுதல்

## ஸ்ரீ சொக்கலிங்கப்பெருமானை வழிபடுதல்

விழாமலர் :

திருநாவுக்கரசு சுவாமிகள் அருளிய

# ஆறாந் திருமுறை

மாலை 6 மணிக்கு

கனகாபிஷேகம் கொண்டருளிய

ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள்

காவிரித் திருமஞ்சனத்திற்கு எழுந்தருளிக் குருமூர்த்த
வழிபாடு செய்தருளல்

13—6—63 வியாழக்கிழமை

காலை 11 மணிமுதல்

## ஸ்ரீ சொக்கலிங்கப்பெருமானை வழிபடுதல்

பகல் 12 மணிமுதல்

## மாகேஸ்வரபூஜை

இரவு

## பட்டணப்பிரவேசம்

உ
குருபாதம்

# ஞானசம்பந்தம்

தருமையாதீனத் திங்கள் இதழ்

மலர் 22 ] சோபகிருது - சித்திரை - 10—5—63 [ இதழ் 6

திருச்சிற்றம்பலம்

பொன்றயங் கிலங்கொளிந் நலங்குளிர்ந்த புன்சடை
பின்றயங்க ஆடுவாய்! பிஞ்ஞகா! பிறப்பிலீ!
கொன்றையம் முடியினாய்! கூடலால வாயிலாய்!
நின்றயங்கி யாடலே நினைப்பதே நியமமே. (சம்பந்தர்)

திருச்சிற்றம்பலம்

## ஞானக்கொழுந்து!

ஊழ்வினை உருத்து வந்து ஊட்டுதலால் கடற்கரைப் பாடலால் காதலியைத் துறந்து கற்புடை மனைவி கண்ணகியுடன் கவுந்தியடிகள் துணையாக மதுரைமாநகரம் நோக்கிச் சிலம்பு முதலாக வாணிகம் செய்ய முற்படும் கோவலன் தன் வழிநடையில் கொற்றவைக் கோயிலுக்கு வருவதற்கும்; அங்கே வேட்டுவர்கள் கொற்றவை வழிபாடு தொடங்குவதற்கும் சரியாக இருந்தது. சமணர்கள் தம் காப்பியம் என்று கொண்டாடும் சிலப்பதிகாரத்தில் கொற்றவையின் மெய்ப்புகழ் கூறப்படும் இடம் இதுவாகும்.

வேட்டுவர்கள் ஒருகன்னிப் பெண்ணைத் துர்க்கைக் கோலம் கொள்ளச் செய்கின்றார்கள். கொற்றவையாக அவளை முன்னிறுத்திக் கரங்கூப்பிக் கவியிசைக்கின்றார்கள்.

" பவள வாய்ச்சி; தவளவாள் நகைத்தி
நஞ்சுண்டு கறுத்த கண்டி ; வெஞ்சினத்து
அரவுநாண் பூட்டி நெடுமலை வளைத்தோள்
துளை யெயிற்று உரகக் கச்சுடை முலைச்சி ;
வளையுடைக் கையிற் சூலம் ஏந்தி ;
கரியின் உரிவை போர்த்தணங்காகிய
வரியின் உரிவை மேகலை யாட்டி ;
சிலம்பும் கழலும் புலம்பும் சீறடி
வலம்படு கொற்றத்து வாய்வாட் கொற்றவை ;
இரண்டு வேறுருவிற் திரண்ட தோளவுணன்
தலைமிசை நின்ற தையல் ; பலர்தொழும்
அமரி ; குமரி ; கவுரி ; சமரி ;
சூலி ; நீலி ; மாலவற் கிளங்கிளை
ஐயை ; செய்யவள் ; வெய்யவாட்டடக்கைப்
பாய்கலைப்பாவை ; பைந்தொடிப்பாவை ;
ஆய்கலைப்பாவை ; அருங்கலப்பாவை".

என்ற வரிகளில் கொற்றவையின் பெரும்புகழ் கூறப்படுகின்றது. இவற்றைப் பயிலுங்கால் மகிஷாசுர மர்த்தனியே நம் மனக்கண் முன்னால் திருக்காட்சி வழங்குதல் தெளிவு. கொற்றவையைப்பற்றிச் சிலப்பதிகாரம் தரும் செந்தமிழ்க் கவிதை இத்துடன் முடியவில்லை. மேலும் பல பாடல்களில் வேட்டுவர்கள் கூற்றாக வைத்துக் கூறப்படுகின்றது.

'ஆனைத்தோல் போர்த்துப் புலியின் உரியினை உடுத்துக் காட்டெருமைக் கருந்தலைமேல் நிற்பவளே,' வேட்டுவர்கள் கரங்குவித்துத் தொழுகின்றார்கள். வரிவளைக்கையில் வாள் ஏந்தி மகிடாசுரனைக் கொன்று கரிய திரிகோட்டுக் கலைமிசை மேல் நிற்பவளே' உளமாரத் தொழுகின்றார்கள். 'சங்கமும்

சக்கரமும் தாமரைக் கையில் ஏந்திச் செங்கண் அரிமான் சினவிடைமேல் நிற்பவளே ' கரங்கூப்பித் தொழுகின்றார்கள்.

"வானோர் வணங்க மறைமேல் மறையாகி
ஞானக் கொழுந்தாகி நடுக்கின்றியே நிற்பாய்"

"அரியரன்பூ மேலோன் அகமலர்மேல் மன்னும்
விரிகதிரஞ்சோதி விளக்காகியே நிற்பாய்"

"கங்கை முடிக்கணிந்த கண்ணுதலோன் பாகத்து
மங்கையுருவாய் மறையேத்தவே நிற்பாய்"

இளங்கோவடிகள் தம் சொற்கோயிலுள் ஞானக் கொழுந் தாக - நான்மறை விளக்காகக் கொற்றவையை வைத்து வழிபடுகின்றார். இன்றும் ஞானக் கொழுந்தாகி நின்று அம்மை அருள் வழங்கி வருதல் கண்கூடு.

சிங்கவரம் செல்லுவோர் அங்குள்ள குகைக்கோயிற் சுவரிலே மகிஷாசுர மர்த்தனியைக் கண்டு மகிழலாம். இது மகேந்திரவர்மப் பல்லவன் குடைந்துள்ள குகைக்கோயில். தேவி வலதுகாலை எருமைத் தலையில் வைத்து, இடது காலைத் தரையிலே ஊன்றி சங்கு சக்கரங்களைத் தாங்கி, பக்கமாகச் சாய்ந்திருக்கும் திருக்கோலம் இங்கே காணலாம். இளங்கோவடிகளின் திருவாக்குக்கு - இது நல்ல இலக்கியம் போல, கண்காண உரைவகுத்ததுபோல விளங்குகின்றது. பல்லவர், பாண்டியர் காலத்தே கொற்றவை வழிபாடு பெருஞ்சிறப்புப் பெற்றமையை வரலாறு காட்டுகின்றது.

மகாபாரதத்தில் இரண்டிடங்களில் துர்க்கையின் பிரார்த்தனை உள்ளதென்பர். சண்டி, சாமுண்டி, கௌசிகி போன்றவையும் சக்தியின் அவதாரங்களே. தொன்று தொட்டு நடந்துவரும் சக்திவழிபாடு நம் நாட்டில் பிற்காலத் தில் பெருஞ்சிறப்புற்றது. பிராமி, மகேசுவரி, கௌமாரி, வைஷ்ணவி, வராகி, மகேந்தரி, சாமுண்டி என்ற சப்த மாதர்கள் வழிபாடு பழையது என்பதை நம் நாட்டுப்

பண்டைக்காலச் சிற்பங்களால் தெளிவாக்குவர் சரித்திர ஆராய்ச்சியாளர். இவ்வவதாரங்களுள் வனதுர்க்கை யவதாரமும் ஒன்றாகும்.

"வெற்றிவேல் போர்க் கொற்றவை சிறுவன்" என்று திருமுருகாற்றுப் படையில் நக்கீரர் திருமுருகனைப் போற்று கின்றார். நச்சினார்க்கினியர் நல்லுரை இப்பகுதியில் சிறந்து விளங்குவதுடன் நமக்கு ஒரு பேருண்மையை விளக்கு கின்றது; சிறுவன் - வனதுர்க்கையின் புதல்வன்' என்று உரைத்தார். 'வெல்போர் - அவள் மகிடனைச் செற்றது' என வரைந்தார். வனதுர்க்கையின் புதல்வனாகவே குமரக்கடவுள் இவ்விடத்தில் போற்றப்பட்டிருத்தலை அன்புலகு அறியும்.

இவ்வனதுர்க்கைப் பிரதிட்டையை, ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணியவர்கள் தருமையில் ஸ்ரீ ஆனந்தபரவசர் பூங்கா வில் செய்தருளியுள்ளார்கள். நம் நாட்டிற்கு வந்துள்ள போர் அபாயத்தினின்றும் நாடு விடுபட்டு நன்மைகள் பெருகி நல்லறங்கள் மலியவும், தீயவை ஒடுங்கவும் ஞானக் கொழுந்தாகிய அம்மையை - வன துர்க்கையாக எழுந்தருள் வித்துள்ளார்கள். அம்மையருளால் - கொற்றவையின் அருள்வளத்தால் நாட்டை வாழ்விக்க முற்பட்டுள்ள ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணியவர்கள் திருவடிகட்குத் தமிழகம் கடமைப்பட்டுள்ளது.

இளங்கோவடிகளால் 'ஞானக்கொழுந்து' என்று போற்றப்பட்ட வனதுர்க்கையின் பேரருளால் வையகம் துயர் தீர்வதாக! 'சொல்லும் பொருளும் என நடமாடுந் துணை வருடன் புல்லும் பரிமளப் பூங்கொடியின் திருவருளால் இன்பமே எங்கும் பெருகி நலம் கொழிப்பதாக. நாடு செழிப்ப தாக. புதிய வருடத்தில் புதுமைப் பேறெல்லாம் பொங்கி நிலவுவனவாக.



# வணக்கம்

'இமயம்முதல் குமரிவரை' என்று பேசப்படும் பெரும்புகழ் படைத்தநாடு இந்தியப் பெருநாடு. இந்நாட்டு மக்கள் கொண்டுள்ள மதங்களும் சமயங்களும் பலவேறு வகைப்பட்டன. அவற்றுள் உலக சமயங்கள் எல்லாவற்றையும் உட்கொண்டு விளங்கும் சமயம் நமது சைவசமயம். சைவந் தழைக்கத் தோன்றிய அருளாளர்கள் பலர். அவர்களுள் திருநாவுக்கரசு சுவாமிகள் நாட்டு மக்கள் இன்புற்று வாழ - அல்லலைப் போக்க - வழி வகுத்தருளியுள்ளார்கள். ஆறுந்திருமுறை பற்றிய அருளுரையில் துன்பந்துடைத்து இன்புற்று வாழும் வழி "கயிலை மலையானைப் போற்றி வழிபடுதலேயாகும்" என்றருளிய ஒரு திருப்பாடலுக்கு எளிய நடையில் பொருள் விளக்கம் செய்கின்றார்கள் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி அவர்கள்.

தருமையாதீன முதற்பெருங்குரவர் ஸ்ரீ குருஞானசம்பந்தர் குருபூஜைத் திருநாள் 12—6—63 புதன்கிழமையன்று மிக்க சிறப்புடன் நிகழவிருக்கின்றது. அவ்விழா நிகழ்ச்சிகளைக் காண விரும்பும் அன்பர்களுக்காக முன்னதாகவே ஞானசம்பந்தத்தில் அவை வெளியிடப்படுகின்றன. குருபூஜைவிழா நினைவாக ஸ்ரீ குருஞானசம்பந்தர் திருவுருவப்படம் அட்டைப்படமாக அழகு செய்கிறது.

தருமையாதீனம் ஸ்ரீ ஆனந்தபரவசர் பூங்காவில் புதிதாக ஸ்தாபனஞ்செய்யப் பெற்றுள்ளது ஸ்ரீ வனதுர்க்கை. அதன் சிறப்பு தலையங்கமாக விளங்குகிறது. சென்னை புரசைவாக்கத்திலுள்ள இந்திய இளைஞர் சங்கத்தினர் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி அவர்களுக்கு வாசித்தளித்த வாழ்த்துரையும் இடம்பெற்றுள்ளது.

மணிமேகலை என்ற இலக்கியத்தை நாடக வடிவில் அமைத்துத் தந்து இருக்கின்றார்கள் தருமையாதீனப்பல்கலைக்கல்லூரிமுதல்வர் வித்துவான், திரு. சொ. சிங்காரவேலனார் M. A., அவர்கள். அந்நாடகம் இவ்விதழிலிருந்து தொடர்ந்து வருகின்றது. வழக்கம்போல் சஹஸ்ராகமம், சித்தாந்த வினாவிடை, தொல்காப்பியச் சொல்லதிகார விளக்கம், திருக்குறள் கருத்துரை, எதிர்காலம் முதலியன தொடர்கின்றன. இவ்வாறு வாசக அன்பர்களுக்கு ஞானசம்பந்தம் அறிவொளிவீசி அகம்மகிழ்விக்க வருகின்றது.

உ

குருபாதம்

தருமையாதீனம் 25 ஆவது குருமகாசந்நிதானம்

ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் வழங்கியருளிய

# அருளுரை

மூவாய் பிறவாய் இறவாய் போற்றி
முன்னமே தோன்றி முளைத்தாய் போற்றி
தேவாதி தேவர் தொழுந் தேவே போற்றி
சென்றேறி யெங்கும் பரந்தாய் போற்றி
ஆவா அடியேனுக் கெல்லாம் போற்றி
அல்லல் நலிய அலந்தேன் போற்றி
காவாய் கனகத் திரளே போற்றி
கயிலைமலையானே போற்றி போற்றி.

— திருநாவுக்கரசு சுவாமிகள்.

இமயமலை பாரதநாட்டின் வடஎல்லையாக விளங்கிவருகிறது. இது பாரதநாட்டிற்கே உரிய மலை. தமிழ் மன்னர்கள் இமயத்தில் புலி வில் கயல் சின்னங்களைப் பொறித்தார்கள்; படையெடுத்து வந்த மன்னர்களைப் புறங்கண்டார்கள். இமயத்தைத் தம்முடையதாக நிலைநாட்டினார்கள். சரித்திரத்திலும் தம் புகழை நிலைநாட்டினார்கள். சங்ககால இலக்கியங்கள் இதற்குச் சான்று பகர்கின்றன. பொற்கோட்டு இமயமும் பொதியமும் போன்று நீ வாழ்க' என்று ஓர் அரசனை வாழ்த்துகின்றார் புறநானூற்றுப் புலவர் ஒருவர். நம் நாட்டிற்கே உரிய இரண்டு திருமலைகளையும் இணைத்து அவற்றைப்போல் வாழ்க என்று கூறுவதன் கருத்து இவையிரண்டும் அவன் ஆட்சிக்குட்பட்டவை என்பதேயாகும்.

இத்தகைய நம் இமயத் திருமலையில்தான் சைவ சமயத்திற்கு ஜீவாதாரமானவையாகிய திருக்கயிலாயமும், திருக்கேதாரமும் திகழ்கின்றன. வைணவத்திற்குப் பெரிதும் சிறப்புற்ற பதரிநாதமும் உள்ளது. திருக்கயிலாயமும், திருக்கேதாரமும் உள்ள இமயப் பெருமலையில் தோன்றியுள்ள இடர்களைக் கடிதற்கு

சிவபெருமான் திருவருளையன்றி வேறு அடைக்கலம் அடையும் அருந்துணை இல்லை.

ஒரு காலத்தில் திருக்கயிலையைப் பெயர்க்க முற்பட்ட இராவணன் - தோளாற்றலும் வாளாற்றலும் உடைய பேரரசன் நிலை என்னவாயிற்று என்பதை வரலாறு காட்டும்.

" இருசுடர் மீது ஓடா இலங்கைக் கோனை
ஈடழிய இருபது தோளிறுத்தான் கண்டாய் "
" அருவரையை எடுத்தவன்றன் சிரங்கள் பத்தும்
ஐந்நான்கு தோளும் நெரிந்து அலற அன்று
திருவிரலால் அடர்த்தவன் காண் "

" கரியத்தான் கண்சிவந்து கயிலைநன் மலையைப்பற்றி
இரியத்தான் எடுத்திடலும் ஏந்திழைஅஞ்ச ஈசன்
நெரியத்தான் ஊன்றுமுன்னம் நிற்கிலாதலறி வீழ்ந்தான்
மரியத்தா னூன்றினேன் மறித்துநோக்கில்லை யன்றே "

" உற்றிறை யூன்றுமுன்னம் உணர்வழிவகையால் வீழ்ந்தார் "

என்பன அப்பர்சுவாமிகள் திருவாக்குகள்.

ஆணவமிகுந்த அவ்வரக்கர் தலைவன் இறைவன் மறக்கருணைக்கு இலக்கானான்; சாமகீதம் பாடி வழிபட்டான், உய்ந்தான். அதுபோல் இன்றும் நம் புனிதத் திருமலையில் பகைவர் வலுத் தாக்குதலால் இடர் வந்திருக்கின்றது. இந்த இடர் தீர்ப்பவன் திருநீலகண்டனாகிய கயிலாயநாதனே ஆவான்; அப்பிரான் திருவடிகளையே நோக்கிக் " காவாய்! கனகத்திரளே! கயிலை மலையானே! காவாய் " என்று கூவி வழிபடுதலே வேண்டும்.

திருநாவுக்கரசு சுவாமிகளது ஆருந்திருமுறை வாக்கு இந்த சந்தர்ப்பத்தில் நமக்கு அற்புதமான பலனைத்தரும்.

திருநாவுக்கரசு சுவாமிகள் திருக்கயிலாய யாத்திரை புரிந்தருளிய சிறப்புடையவர். இறைவனால் ஆளப்பெற்ற சமயாசாரியர்கள் நால்வரிலும் மிக்க முதியவராக இருந்து பழுத்த அருளனுபவத்தைப் பாட்டமுதமாக வடித்தருளியவர்; தம்முடைய வாழ்நாளில் சைவ சமயத்தில் திருவவதாரம் செய்தருளிக் கொல்லாமை மறைந்துறையும் அமண சமயம் குறுகி அங்குச் சிறந்து விளங்கி இறைவனால் சூலைநோயருளப்பட்டுச் சைவம் சார்ந்த சான்றோர். ஆசாரிய நிலையில் இருந்து இவ் வருளரசரைச் சைவத்திற்குத் திருப்பியவர் திலகவதியார் ஆவார்.

அப்பெருமாட்டி தந்தருளிய திருநீறும் உரைத்தருளிய உபதேச மொழிகளுமே திருநாவுக்கரசு சுவாமிகளுக்கு அருள் நெறி காட்டின. அந்நெறி நின்ற அப்பரடிகள் செந்தமிழ் நாட்டை வாழ்வித்தார். சமய சமுதாயப் பணிகளைச் செய்தார்; " ஆளும் நாயகன் கயிலையில் இருக்கை கண்டல்லால் மாளும் இவ்வுடல் கொண்டு மீளேன் " என்ற உறுதியோடு கயிலையாத்திரையை மேற்கொண்டார்.

" வெள்ளி வெற்பின்மேல் மரகதக்கொடியுடன் விளங்கும்
தெள்ளு பேரொளிப் பவளவெற்பென இடப்பாகம்
கொள்ளு மாமலை யாளுடன் கூடவீற் றிருந்த
வள்ளலாரைமுன் கண்டனர் வாக்கின் மன்னவனார் "

என்று சேக்கிழார் சுவாமிகள் செந்தமிழால் இசைத்தபடி இறைவனையும் இறையையும் கண்ணாரக்கண்டு தரிசித்தார். அத்தரிசன இன்ப அனுபவத்தை இனிய போற்றித் திருத்தாண்டகங்களாக ஆக்கியருளினார். இவற்றுள் அமைந்த வேற்றாகி விண்ணாகி எனும் பதிகத்துள் ஒன்பதாம் திருப்பாடலே மேலே குறிப்பிடப் பெற்றதாகும்.

இத்திருப்பாடலில் சுவாமிகள் சிவபிரானது தொன்மைத் திருக்கோலத்தை உரைத்தருள்கின்றார். என்றும் ஒரு தன்மையனாக - இளையோனாக இருக்கும் அம்முதற்பொருளைப் பலபடியாகப் போற்றுகின்றார்.

" மூவாய் பிறவாய் இறவாய் போற்றி " மூப்பில்லை; பிறப்பில்லை; இறப்பில்லை என்கின்றார்.

" மூவாத மேனி முக்கண்ணா போற்றி "
" முன்பாகி நின்ற முதலே போற்றி "

என்றும்பின்னருள் வாராதலின் இங்கும் இறைவனுடைய இத்தன்மையை விளக்கியருள்கின்றார். இறைவனுக்குப் பிறப்பும் இறப்பும் இல்லை என்று சுவாமிகள் தம் திருவாக்கிற் புலப்படுத்தும் இடங்கள் பல ; சில பின்வருமாறு :-

" இறப்போடு பிறப்பிலானை " (4—74—3)
" பிறப்பிலார் இறப்பிலார் பிணியொன்றில்லார் " (6—10—8)
" பிறவாதே தோன்றிய பெம்மான்தன்னை " (6—11—1)
" பிறவாதும் இறவாதும் பெருகினான் " (6—74—1)

' பிறவாயாக்கைப் பெரியோன் கோயில் என்றே இளங்கோவடிகளும் அருளியுள்ளமை இங்கு ஒப்பிட்டுணரத் தக்கது.

எல்லார்க்கும் முன்னே தோன்றி மூத்தவன் இறைவனே என்பதை அடுத்துக் கூறிப் போற்றினர், மகா தேவனாக நிற்பவனாதலின் ' தேவர் தொழும் தேவு ' என்று போற்றினர் பின்னர்.

" மூலமாகிய மூவர்க்கும் மூர்த்தி " (5—57—5)
" மூவராய் முதலாய் நின்ற மூர்த்தியே " (5—36—5)
" வானோர் வணங்கப் படுவாய் போற்றி " (6—56—1)

என்பன போன்ற பகுதிகள் ஒப்பிட்டுணரதக்கன. எங்கும் நிறைந்திருப்பவன் என்று போற்றியவர் அடியேனுக் கெல்லாம் நீயே என்று கூறியருளினர். அல்லல்கள் நலிதலால் வருந்திய விடத்து அவனொருவனே துணை யென்று அடுத்துப் புலப்படுத்தினர். இறுதியில் கனகத் திரளாக அவனைக் கண்டு கசிந்துருகிப் போற்றுகின்றார். கனகத்திரளாக இறைவன் விளங்குவது கயிலை யாத்திரை செய்தார்க்கே நன்கு விளங்கும் நுட்பமாகும். ஆம்; திருவருளால் நமக்கு வாய்த்த அந்த இமய மகாயாத்திரையில் நம் அநுபவத்திலும் நன்கு விளங்கிய உண்மையாகும் இது.

எல்லாம் கடந்த இறைவனது திருக்காட்சி தம் திருவுள்ளத்தே செம்பொருளாக — கனகத்திரளாக • தோன்றி யிருத்தலால் இவ்வாறு அருளி யுள்ளார் அவர்கள்.

" மண்ணல்லை விண்ணல்லை வலயமல்லை
மலையல்லை கடலல்லை வாயுவல்லை
எண்ணல்லை எழுத்தல்லை எரியுமல்லை
இரவல்லை பகலல்லை யாவுமல்லை
பெண்ணல்லை ஆணல்லை பேடுமல்லை
பிறிதல்லை யானாயும் பெரியாய் நீயே
உண்ணல்லை நல்லார்க்குத் தீயையல்லை
உணர்வரிய ஒற்றியூருடைய கோவே " (6—45—9)

என்று பாடியருளிய சுவாமிகள் எல்லாம் கடந்த இறைவனைத் திருக்கயிலைத் திருத்தாண்டகங்களில் எல்லாமாகக் கண்டு ஏத்தியருளியுள்ளார். எல்லாம் சிவமயம் என்று உலகுக்குக் காட்டியுள்ளார். இத்திருப்பாடல் மூவாத பிறவாத இறவாத அம்முதற்பொருளைக் கனகத்திரளாகக் காட்டுகின்றது. அக்காட்சியைக் கருத்துட் கண்டு செந்நெறிநிற்கச் சமய உலகம் தலைப்படுமாக.



தருமையாதீனம் ஸ்ரீலஸ்ரீ ஆனந்தபரவசர் பூங்காவில்
புதிதாக பிரதிஷ்டை செய்யப்பெற்ற ஸ்ரீ வனதுர்க்கைக்கு
புத்தாண்டுப் பிறப்பன்று நிகழ்ந்த சிறப்பு வழிபாடு

தருமையாதீனத்தில் அப்பர் சுவாமிகள் குருபூஜைத் திருநாளில்
அப்பர் சுவாமிகள் சிவிகையில் எழுந்தருளல்
ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி அவர்களும்
தருமையைக் காணவந்த இந்திய



தருமையாதீனத்திற்குச் சொந்தமான ஸ்ரீ சட்டைநாதசுவாமி
தேவஸ்தானத்தில் திருஞானசம்பந்தர் புறப்பாட்டின்போது
ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி அவர்கள் அருளுரை வழங்குதல்

ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி அவர்கள்
இந்திய இளைஞர் சங்கத்தினருக்கு அருளாசி வழங்குதல்

# சித்தாந்த வினாவிடை

தருமையாதீனத் தமிழ்ப்புலவர், சித்தாந்தக் கலைமணி,
வித்துவான். திரு. சி. அருணைவடிவேலு முதலியார்.

( மலர் 22, இதழ் 5, பக்கம் 248 இன் தொடர்ச்சி )

## பொருள் உண்மை

மாணாக்கன் :- சித்தாந்தத்தின் முதல்நூல்கள் இவை என்பதனைத் தெரிவித்தருளினீர்கள்; இனி, சித்தாந்தத்திற் கொள்ளப்படும் பொருள்கள் இவை என்பதனை அருளிச்செய்தல் வேண்டும்.

ஆசிரியர் :- சித்தாந்தத்திற் கொள்ளப்படும் பொருள் மூன்று; அவை, 'பதி பசு, பாசம்' என்பன. பதி, கடவுள்; பசு, உயிர்; பாசம், உயிரைப் பிணித்துள்ள கட்டு; இவை முறையே. 'இறை, உயிர், தளை என்றும் சொல்லப்படும்.

மாணாக்கன் :- பதி, பசு, பாசம் இவை தனித்தனி எத்துணைய ?

ஆசிரியர் :- பதிப்பொருள் ஒன்றே; இரண்டாவது இல்லை. பசுக்கள் எண்ணில. பாசம் மூன்று; அவை, 'ஆணவம், கன்மம், மாயை' என்பன. இவை உயிரைக் கட்டுப்படுத்தல் பற்றிப் 'பாசம்' எனப்படுதல்போல, உயிர்களின் தூய்மையைக் கெடுத்து நிற்றலாலும், பின்னர் அகற்றப்படுதலாலும் 'மலம்' எனவும் படும், மலம் - அழுக்கு.

மாணாக்கன் :- 'பதி, பசு, பாசம்' என்னும் முப்பொருள்களுள் பதி ஒன்றுதானே என்றும் உள்ளது? மற்றைய பசுவும், பாசமும் அந்தப் பதியிலே தோன்றி பதியிலே ஒடுங்குபவைதாமே? அவைகளை ஏன் வேறு தனிப்பொருளாக எண்ணி, 'மூன்று பொருள்கள்' எனக் கூறவேண்டும் ?

ஆசிரியர் :- அவ்வாறல்ல; 'பதி. பசு, பாசம்' என்னும் முப்பொருள்களில் எந்தப் பொருளும் மற்றொன்றிலிருந்து தோன்றவில்லை; மூன்றும் மூன்று தனிப்பொருள்களே. பதி

என்றும் இருத்தல்போல, மற்றைய இரு பொருள்களும் என்றும் உள்ள பொருள்களே. முப்பொருள்களுள் எந்த ஒன்றும் ஒருகாலத்தும் ஒன்றிலிருந்து தோன்ருமையால் அவை என்றும் அழிவனவும் அல்ல. இம் முப்பொருள்களும் என்றும் உள்ள அநாதி நித்தியப்பொருள்கள். "பதிபசு பாசம் எனப்பகர் மூன்றில் - பதியினைப் போறப்பசு பாசம் அநாதி" என்பது திருமந்திரம்.

மாணக்கன் :- ஒருபொருளை, 'தோன்றல் அழிதல் இன்றி என்றும் உள்ள பொருள்' என்றும், மற்றைய பொருள்களை, 'அதனில் தோன்றி ஒடுங்கும் பொருள்' என்றும் கொள்ளாமல்' இவ்வாறு, மூன்று பொருள்களை, 'தோற்றமும் அழிவும் இல்லாது என்றும் உள்ள பொருள்கள்' என்று கொள்ளவேண்டுவது என்னை ?

ஆசிரியர் :- 'இல்லது தோன்ருது' என்பதும், 'உள்ளது அழியாது' என்பதும் சித்தாந்த அடிநிலை உண்மைகளுள் சிறந்த உண்மைகளாகும் ; அஃதாவது, இல்லது எக்காலத்தும் இல்லதே ; அஃது என்றும் உள்ளதாதல் இல்லை ; அவ்வாறே உள்ளது எக்காலத்தும் உள்ளதே ; அஃது என்றும் இல்லதாதல் இல்லை என்பதாம். ஆகவே, 'தோன்றுதல்' என்பதும், 'அழிதல்' என்பதும் அவற்றையுடைய பொருளின் நிலைமாற்றங்களே யன்றி வேறல்ல என்பது தெளிவாகும். தோன்றி அழியும்நிலை காரிய நிலையும், தோற்றத்திற்கு முன்னும் அழிவிற்குப் பின்னும் உள்ளநிலை காரண நிலையும் ஆகும். அதனல், தோன்றுதலாவது காரண நிலையிலிருந்து காரிய நிலையை அடைவதே என்றும், அழிதலாவது காரிய நிலையிலிருந்து மீண்டு காரண நிலையை அடைவதே என்றும் உணரலாம். எடுத்துக்காட்டாக.

'குடம் தோன்றிற்று' என்ருல், அது, 'மண்' என்னும் நிலையிலிருந்து 'குடம்' என்னும் நிலையை அடைந்தது என்பதும், 'குடம் அழிந்தது' என்ருல், அது, 'குடம்' என்னும் நிலையிலிருந்து முன்போல 'மண்' என்னும் நிலையை அடைந்தது என்பதுமே பொருளாகும். இவ்வாறு நிலை வேறுபடினும் இருநிலையிலும் பொருட்டன்மை ஒன்ருயே இருக்கும். அதனை, மட்குடம் மண்ணின் தன்மையும், பொற்குடம் பொன்னின் தன்மையும் உடையவாய் இருத்தல் கொண்டு உணரலாகும். இதனல், பயன்வேறுபாடுபற்றி, காரணப் பொருளையும், காரியப் பொருளையும் 'மண்' என்றும், 'குடம்' என்றும், 'பொன்' என்றும், 'பணி' என்றும் வேறு வேறு பொருள்போல வழங்கினும், பொருட்டன்மையால் அவை ஒன்றேயாம்.

ஆதலின், 'பதி, பசு, பாசம் என்ற மூன்று பொருள்களுள், ஒன்றே உள்ளது; ஏனையவை அதனில் தோன்றி ஒடுங்குவன' எனின், ஒன்று காரணப் பொருளும், ஏனையவை அதன் காரியப் பொருளும் ஆகும்; 'அவ்வாறே ஆகுக' எனின், மேற்கூறியவாறு காரணப் பொருளின் தன்மையே காரியப் பொருளின் தன்மையுமாக வேண்டுமாதலின், மூன்று பொருள்களும் ஒரு தன்மையே உடையனவாதல் வேண்டும். அவ்வாறின்றி மூன்று பொருள்களும் மாறுபட்ட வேறு வேறு தன்மைகளை உடையனவாதல் பின்னர் இனிது விளக்கப்படுமாதலால், முப்பொருள்களுள் ஒன்றை மற்றொன்றின் காரியம் என்னாது, மூன்றும் மூன்று தனிப்பொருள்களே எனக் கொள்ளுதலே பொருந்துவதாதல் அறிக.

இனி, இல்லது தோன்றாது ஆகலானும், உள்ளது அழியாது ஆகலானும் வேறுபட்ட மூன்று தன்மைகளால் வேறு வேறாய் அறியப்படும் மூன்று பொருள்களுள் யாதொன்றனையும், 'ஒரு காலத்துத் தோன்றிற்று' என்றாே, 'ஒருகாலத்து அழியும்' என்றாே கூறுதல் கூடாமையால், 'முப்பொருளும் அனாதி நித்தியப் பொருள்கள்' என்றே கொள்ளவேண்டுதலும் அறிக.

இன்னும், 'மாறுபட்ட பல தன்மை ஒருபொருட்கண் இருத்தல் இயலாது' என்பதும் ஓர் சித்தாந்த உண்மை; அஃதாவது, தட்பமும் வெப்பமும் மாறுபட்ட தன்மைகள்; அதனால், அவை இரண்டும் ஒரு பொருளிடத்தே இருத்தல் இயலாது. உண்மையும் இன்மையும் மாறுபட்ட தன்மைகள்; அதனால், அவை இரண்டும் ஒரு பொருளிடத்தே இருத்தல் இயலாது; பிறவும் இவ்வாறே காண்க.

'இல்லது தோன்றாது; உள்ளது அழியாது' எனவும், 'மாறுபட்ட பல தன்மைகள் ஒரு பொருட்கண் இருத்தல் இயலாது' எனவும் உள்ள இரு நல்ல முடிபுகளின் வழியே நோக்கினால், 'பதி, பசு, பாசம் எனப் பொருள்கள் மூன்று உள்ளன' என்பதும், 'அவை மூன்றும் அனாதி நித்தியப் பொருள்கள்' என்பதும் நிலைபெற்ற உண்மை முடிபுகளாகும் என்பது இனிது விளங்குதல் காண்க.

மாணாக்கன் :- முப்பொருள்களும் அனாதி நித்தியம் எனின், 'இறைவன் உலகத்தைப் படைக்கின்றான்; அழிக்கின்றான்' என்று கூறுவது என்னை ?

ஆசிரியர் :- 'உலகம்' என்பது, 'காரணப் பிரபஞ்சம், காரியப்பிரபஞ்சம்' என இருவகைப்படும். 'காரணப்பிரபஞ்சம்' என்பது மண்போல்வது ; 'காரியப் பிரபஞ்சம்' என்பது குடம் போல்வது. குயவன் குடத்தை மண்ணிலிருந்து தோற்றுவித்த லன்றி மண்ணைத் தோற்றுவித்தல் இல்லை ; அதுபோல, இறைவன் காரியப் பிரபஞ்சத்தைக் காரணப் பிரபஞ்சத்திலிருந்து தோற்றுவித்துப் பின் அதிலே ஒடுக்குவதன்றிக் காரணப் பிரபஞ்சத்தைக் தோற்றுவித்தல் இல்லை. ஆகவே, 'இறைவன் 'படைக்கின்ருன் ; அழிக்கின்ருன்' என்பது காரியப் பிரபஞ்சத்தை எனவும், 'அனுதி நித்தியம்' என்பது காரணப் பிரபஞ்சத்தை எனவும் பகுத்துணர்ந்துகொள்க.

காரியப் பிரபஞ்சம் தோற்ற ஒடுக்கங்களை உடையதாயினும், காரணப் பிரபஞ்சத்திற்கு அவை இல்லாமையால் அஃது அனுதி நித்தியமேயாம் என்க.

மாணுக்கன் :- முப்பொருள்களின் உண்மையையும், நித்திய தன்மையையும் இனிது விளக்கினீர்கள் ; ஆயினும், அதுபற்றி அடியேற்கு ஓர் ஐயம் எழுகின்றது.

பதியாகிய கடவுளைப்போலவே ஏனைய பசுக்களும் பாசங்களும் தோற்றமும் முடிவும் இன்றி என்றும் உள்ளன எனின், மூன்று பொருள்களும் சமம் ஆகையால், இறைவனை, 'எப்பொருட்கும் தலைவன்' என்றும், 'அவன் அன்றி ஓர் அணுவும் அசையாது' என்றும், மற்றும் இவ்வாறெல்லாம் உயர்த்திக் கூறுதல் எவ்வாறு இயலும் ?

ஆசிரியர் :- இஃது ஒரு வினு அன்று ; ஏனெனில், 'உள்ளன' என்று கூறிய அளவில், எல்லாப் பொருளும் சமமாய் விடுதல் எவ்வாறு ? 'உள்ளன' என்ருல், 'எல்லாப் பொருள்களும் ஒரு தன்மையனவாய் உள்ளன' என்பதுதான் பொருளோ ? 'ஒரு நாட்டில் அரசன் என்று உள்ளானே அன்றே குடிகளும் உள்ளனர்' எனின், 'அரசனும் குடிகளும் சமம்' என்பது பொருளாகுமோ? 'உலகில் மக்கள் என்று உள்ளனரோ அன்றே விலங்கு முதலியனவும் உள்ளன' என்ருல், மக்களும் விலங்கு முதலியனவும் சமம் என்று கொள்ளலாகுமோ ? இவ்வாறெல்லாம் ஆகாமைபோல, 'பதி என்று உண்டு, அன்றே பசு பாசங்களும் உள்ளன' என்பதனுல், முப்பொருளும் சமம் ஆமாறு இல்லை. ஆகவே, முப்பொருளும் அனுதி நித்தியம்' என்பதனுல் இறைவனை 'முதற்பொருள்' என்றற்குத் தடை ஒன்றும் இல்லை என்று உணர்க.

(தொடரும்)

# தொல்காப்பியச் சொல்லதிகார - - - விளக்கக் கட்டுரைகள்.

பண்டித வித்துவான், திரு. கு. சுந்தரமூர்த்தி

( மலர் 22, இதழ் 5, பக்கம் 260 இன் தொடர்ச்சி )

**இரட்டைக் கிளவி :**

இரட்டித்துச் சொல்லப்படும் சொற்கள் அவ்விரட்டித்தலி னின்றும் பிரித்துச் சொல்லப்படா. (எ-டு) 'சுருசுருத்தது' என்றவிடத்து ஒருங்கு நின்றே பொருளுணர்த்தியவாறு காண்க (48). இது வழுவற்க என்பதாம்.

**ஒரு பெயர்ப் பொதுச்சொல் :**

பல பொருட்கும் பொதுவாகியதொரு இடத்தையோ பொருளையோ பொதுச்சொல்லால் கூறுது சிறப்புச் சொல்லால் கூறின் அது 'ஒரு பெயர்ப் பொதுச் சொல்'லாம். அத்தகைய சிறப்புச் சொல் தலைமைபற்றியோ அல்லது பன்மை பற்றியோ கொடுக்கப் படும். இந்நெறி இருதிணைக்கும் ஒக்கும் (எ-டு) 'அரசர் பெருந்தெரு' என்றவிடத்து ஏனைய மக்களும் அத்தெருவின்கண் இருப்பினும் அவர்களையெல்லாம் கருதாது தலைமைபற்றி அரசர்க்கே உரிய சிறப்புச் சொல்லால் 'அரசர் பெருந்தெரு' எனக் கூறலின் இதற்கு உதாரணமாயிற்று. பல பொருளுக்குப் பொதுவாக இருக்கும் இடத்தை ஒருவற்கே உரியதாய்ச் சொல்லுதல் வழுவேனும் அமைக்கவென மரபு வழுக்காத்தது. 'கமுகந் தோட்டம்' என்பது பன்மைபற்றி வந்ததற்கு உதாரணமாம் (48). இது வழுவமைதியாம்.

**ஒன்றொழி பொதுச் சொல் :**

உயர்திணைக்கண்ணும் அஃறிணைக்கண்ணும் ஆண் பெண் இருபாற்குமுரிய பொதுச் சொற்கள், தத்தம் பால் பொதுமையி னின்றும் நீங்கிச் சிறப்பாக ஒவ்வொரு பாலுக்கே உரியதாய் வருதலும் உண்டு. இந்நிலை சிலவற்றிற்குப் பெயரினும்,

சிலவற்றிற்கு வினையினலும் வரும். இதனையே 'ஒன்றெழி பொதுச்சொல்' என நன்னூலாரும் கூறுவர். (எ-டு) 'இவர் வாழ்க்கைப் பட்டார்' என்றவிடத்து 'இவர்' என்பது ஆண் பெண் என்னும் இருபாற்குமுரித்தேனும் 'வாழ்க்கைப்பட்டார்' என்ற வினைச்சொல்லால் ஆணையொழித்து பெண்ணைக்குறித்து நின்றது. இதனைத் தொழிலிற் பிரிந்த ஆணெழி மிகுசொல் என்பர். 'நம்மரசன் ஆயிரம் யானை யுடையன்' என்றவிடத்து யானை என்பது ஆண் பெண் என்னும் இருபாற்கும் உரித்தே னும் அரசன் (ஆயிரம் யானை உடையன்) என்ற பெயரால் பெண் பாலை யொழித்து ஆண்பாலைக் குறித்து நின்றது. இதனை அஃறிணைக்கண் பெயரில் பிரிந்த பெண்ணெழி மிகுசொல் என்பர். இருபாற்குமுரியசொல் ஒருபாற்கே உரியதாய் வருதல் வழுவேனும் அமைக்க என மரபு வழுக்காத்தது (50). இதனையே,

"இருதிணை யாண்பெணுள் ஒன்றனை ஒழிக்கும்
பெயரும் வினையும் குறிப்பி னனே".

என நன்னூலாரும் விளக்கியிருத்தல் காண்க. இது வழுவமைதி யாம்.

பலபோருளோருசோல் :

வினைவேறுபடூஉம் பலபொருளொரு சொல்லென்றும், வினை வேறுபடாஅப் பலபொருளொரு சொல்லென்றும் பலபொருள் ஒருசொல் இருவகைப்படும்.

(அ) வினைவேறுபடூஉம் பலபோருளோரு சோல் :

மா என்னும் சொல் வண்டு, மரம், குதிரை என்னும் பல பொருட்கும் உரியதாய் இருத்தலின் பலபொருள் ஒரு சொல்லாம். இது இன்ன பொருளில் வந்ததென்பதைத் தனித்து நிற்புழி அறிய இயலாது. இதனெடு இயைந்த வினையைக் கொண்டோ, இனத்தைக் கொண்டோ, சார்பைக்கொண்டோதான் பொருள் விளங்க இயலும். (எ-டு) 'மாப்பூத்தது' என்புழிப் பூத்தது என்னும் வினையால் மா என்பது மரம் என அறியலாம். 'மாவும் மருது மோங்கின' என்புழி மருதும் என்ற இனத்தால் முன்னைய மா என்பது மரம் என விளங்கிற்று. "போர்க்கோலம் பூண்டு மாக்கொணு" என்றவிடத்து போர்க்கோலம் பூண்ட சார்பினல் மா என்பது குதிரையை உணர்த்திற்று.

(ஆ) வினை வேறுபடாஅப் பலபொருளொரு சொல் :

இங்ஙனம் வினை, இனம், சார்பு என்ற மூன்றும் கொண்ட பலபொருளொரு சொற்களை இன்னதெனை விளங்கிக் கொள்ளலா மேனும், சில வினை கொடுக்குமிடத்து அவையே பொருள் விளங்காமல் போதலும் உண்டு. அவற்றை 'வினைவேறுபடாஅப் பலபொருளொரு சொல்' என்பர். (எ - டு) 'மா வீழ்ந்தது' என்புழி வீழ்ந்ததென்னும் வினை இருப்பினும் மா என்பது இன்ன தென அறிதற்கியலவில்லை. எனவே வினைவேறுபடூஉம் பல பொருளொரு சொல் இவை, வினை வேறுபடாஅப் பல பொருளொரு சொல் இவை எனப் பிரித்தற்கு இல்லை. சில வினை கொடுப்புழி வினைவேறுபடூஉம் பலபொருள் ஒரு சொல்லே வேறு சில வினைகொடுப்பின் (பொருள் விளங்காதாயின்) வினை வேறுபடாஅப் பலபொருள் ஒரு சொல்லாகும் என்பதாம். இங்ஙனம் வினைகொடுத்தும் இன்னதென விளங்கமுடியாத பல பொருளொரு சொல்லை எங்ஙனம் விளக்கிச் சொல்லின் விளங்கு மோ அங்ஙனம் விளக்கிச் சொல்லவேண்டும் என்பது மரபாம். (எ-டு) 'மா வீழ்ந்தது' என்புழி இன்னது வீழ்ந்தது என விளங்க வில்லை. அதனையே 'மா மரம் வீழ்ந்தது' என்னுமாயின் நன்கு விளங்குதல் காண்க (52, 53, 54). இது வழூவற்க என்பதாம்.

தெரிந்துமொழி கிளவி :

ஒருவன் ஒரு பொருளின் வேறுபாட்டைச் சொல்லுங்கால் அவ்வேறுபாட்டினை இயற்கையாகவே பிறன் உணர்ந்து கொள்ளுவனுயின் அப்பொருள் வேறுபாட்டிற்குக் காரணம் சொல்லவேண்டுவதில்லை. இயற்கையாக விளங்காதாயின் அவ் வேறுபாட்டிற்குரிய காரணத்தை விளங்கச் சொல்லுதல் மரபு. (எ-டு) 'அருவி நாறும்' என்புழி அருவி நாறுதற்குக் காரணம் இயல்பில் விளங்கவில்லை 'வண்டுகள் மது உண்பதால்' ஆங்காங்கு உதிர்ந்த நறுமலர்கள் அருவியின்கண் வருதலின் நாறிற்று' எனக் காரணத்தை விளங்கச் சொல்லவேண்டும் என்பதாம் (55). இது வழுவற்க என்பதாம்.

எடுத்தமொழி இனஞ்சேப்பல் :

இனமாகிய பொருட்கண் ஒன்றைமட்டும் எடுத்துக் கூறின் அச்சொல் தன் பொருளுக்கு இனமாகிய பிறபொருளைக் குறிப் பால் உணர்த்துதலும் உண்டு. அன்றிக் குறிப்பால் உணர்த்தா மையும் உண்டு. (எ-டு) 'அறம் செய்தான் துறக்கம் புகும்'

என்ற தொடருக்கு 'மறம் செய்தான் நிரயம் புகும்' என்ற தொடர் இனமாம். இவ்விரண்டனுள் ஒன்றைக் கூறின் ஏனைய தையும் குறிப்பால் உணர்த்துதலுண்டு. சொல்லுவார்க்கு அக் கருத்து இல்லையாயின் இனம் சுட்டாமையும் உரித்து என்ப தாம் (60). இது வழுவமைதியாகும்.

முடிவுரை :

இதுகாறும் கூறியவாற்ருல் கிளவியாக்கம் என்னும் சொற்குப் பொருள் ஆமாறும், எழுவகை வழுக்களுள் காலவழு நீங்கலாக ஏனை அறுவகை வழுக்களையும் வழுவற்க என்றும் வழுவமைதி என்றும் இருவகையாகப் பிரித்து இவ்வியலின்கண் உணர்த்தப் பட்ட வாறும் நன்கு அறியலாம்.

(தொடரும்)



## EXTRACT FROM THE VISITORS' BOOK

### Dharmapuram Adhinam

Sri Vaithianathaswami Devasthanam, Vaithiswarankoil.

இன்று வைத்தியநாதசுவாமியின் தரிசனம் கிடைக்கும் பாக்கியம் பெற்றேன். ஆலயமும் பூஜைகளும் நல்ல முறையில் நடத்திவருவதற்கு அதற்குப் பொறுப்புள்ள பணியாளர்கள் தங்கள் கடைமைகளை உணர்ந்து மக்களுக்கு நல்ல முறையில் தெய்வபக்தியைப் புகுத்த உணர்ச்சியுடன் பணி செய்வதுதான் காரணம். அவர்களுக்கு மேல்மேலும் நற்பணியாற்ற இறைவன் அருள்புரிவாஞக.

(ஒ·ம்) ரா. முத்துக்கண்ணு,
22—1—63 ரெவின்யூ டிவிஷனல் ஆபீசர், சிதம்பரம்.

இறைவனின் இருப்பிடம் இவ்வளவு அழகாகவும், சுத்த மாகவும் வைக்கப்பட்டிருப்பது மனதுக்குப் பேரின்பமளிக்கிறது. தேவஸ்தான நிர்வாகிகளுக்கு எனது மனமார்ந்த பாராட்டுதல் களையும் பணிவன்புடன் கூடிய வணக்கங்களையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

(ஒ·ம்) கி. ராஜேந்திரன்,
6—2—63. உதவி ஆசிரியர் "கல்கி" சென்னை.

# சிவவழிபாடு

திரு. ம. வெ. மு. நாகராஜக்குருக்கள்.

( மலர் 22, இதழ் 5, பக்கம் 267 இன் தொடர்ச்சி )

## வினையால்விளைந்த தடுமாற்றம் :

இதுவரை மேலே குறிப்பிட்ட நல்வினை - தீவினைகளை உயிர்ப் பிறவிகள் ஞானம் - அஞ்ஞானம் இவ்விரண்டின் வயப்பட்டு செய்கின்றன. ஞானம் என்ற மெய்யறிவால் நல்வினைகளாகிய புண்ணியங்களை மக்கள் செய்கின்றனர். தோன்றாத்துணையாயிருந்து இறைவன் உயிர்களை இயக்குவதினாலேயே உயிர்ப்பிறவிகளிடம் நல்வினைகள் நீங்காது நிலைபெற்றுள்ளன. அஞ்ஞானம் என்ற மாயா இருளில் உள்ளபோது மக்கள் தீய வினைகளைத் தயங்காமல் செய்கின்றனர்.

மக்கள் செய்யும் தீய வினைகளுக்கெல்லாம் காரணம் அஞ்ஞானம் என்ற அறிவின்மையே என்று அனைத்து நூல்களும் நுவல்கின்றன. சைவசித்தாந்தத்தில் வினைகளுக்கெல்லாம் அடிப்படையான மூலகாரணம் அழிவற்ற உயிரறிவை முன்னேற விடாது தடைசெய்து வருவதாகச் சொல்லப்படுகின்ற "பாசம்" என்ற அஞ்ஞானத்தின் ஒரு பகுதியான "கர்மம்" என்னும் பழவினையேயாகும் என்று கூறப்பட்டுள்ளது. இக்கர்மம் முறையே சஞ்சிதம் - பிராரத்தம் - ஆகாமியம் என்று மூன்று பிரிவாக வெளிப்பட்டு உயிர்ப்பிறவிகளின் அறிவு, இச்சை, செயல்களைத் தன்னுடையதாக அமைத்துக்கொண்டு சித்தம், புத்தி · அகங்காரம், மனம் என்ற அகக்கருவிகளின் வழியே மக்களை ஜாதி, குலம், பிறப்பு என்னும் சுழிப்பட்டுத் தடுமாறும்படி செய்கின்றது. இந்நிலையையே மாணிக்கவாசகசுவாமிகள்

"சாதிகுலம் பிறப்பென்னும் சுழிப்பட்டுத் தடுமாறும்
ஆதமிலிநாயேனை அல்லல் அறுத்து ஆட்கொண்டு
பேதை குணம்பிறர் உருவம்யான் எனதென் உரைமாய்த்துக்
கோதில் அமுது ஆனானைக் குலாவுதில்லைக் கண்டேனே"

என்ற திருவாசகத்தால் குறிப்பிடுகின்றார்.

துயரங்கள்தீர வழி :

கர்மம் என்று வடமொழியில் கூறப்படுகின்ற பழவினை உயிர்ப்பிறவிகளை எவ்வெவ்வாறு துயரங்களில் ஆழ்த்துகின்றது என்பதையும் இத்துன்பங்களினின்றும் மீள்வதற்கு கருணை மிகுந்த பெரியோர்கள் நமக்குக் காட்டிய நெறியையும் இனிக்காண்போம். மக்கள் இன்ப வாழ்வையே விரும்புகின்றனர். ஆனல் இன்பமும் துன்பமும் கலந்தே வாழ்வு அமைந்துள்ளது. துன்பங்களைத் தாங்கமுடியாது தடுமாறும் மக்களில் பழவினையாம் கர்மத்தின் விரிவை யறிந்தவர்கள், அநுபவிக்கவேண்டிய அவ்வினைகள் முழுமைபெற்றுல்தான் துயரங்களும் பூர்த்தியடைந்து அநுபவங்களில் ஞானசம்பந்தம் ஏற்படும் என்பதை உணர்ந்தனர். துன்பங்களுக்குக் காரணமான எல்லா வினைகளும் பூர்த்தியடைந்து ஞானம் பிறப்பதற்கு "வழிபாடு" என்ற பூஜை ஒரு சாதனமாக அமைந்துள்ளது என்பதையே மேலே குறிப்பிட்டுள்ள காரணுகம சுலோகம் நமக்குக் கூறுகின்றது.

இனி இக்கர்மத்தின் விரிவுகளைப் பார்ப்போம். பழவினைகள் முறையே சஞ்சிதம் - பிராரத்தம் - ஆகாமியம் என மூன்று வகைப்படும். உயிரறிவு விளக்கம் பெறுவதற்காக எப்போது இறைவன் மாயையிலிருந்து சிருஷ்டிக்கப்பட்ட உடல்களோடு அழிவில்லாத உயிர்களை இணைத்துப் பிறவிகள் என்று பெயர்வைத்தாரோ அப்போது முதல் சேமிப்பாக உள்ள வினைகளுக்கே "சஞ்சிதம்" என்று பெயர். மக்களின் புத்தியை நன்ருகப் பிடித்துக்கொண்டு ஒவ்வொரு பிறவியிலும் தொடர்ந்து வந்து தன் திறமையை வெளிப்படுத்தி மக்களைக் கர்மவாதிகளாக மாற்றுவது சஞ்சிதம் என்ற இந்த வினையேயாகும். சிவபெருமானின் அருள் நோக்கால் இந்தவினை (சஞ்சிதவினை) விலகும்.

இதற்கடுத்த பிராரத்தம் என்ற வினை நெற்களஞ்சியத்தி லுள்ள நெல்லை எடுத்து உபயோகப்படுத்துவதுபோல சஞ்சித வினையின் பயன்களை இப்பிறப்பில் இந்தச் சரீரத்தால் அநுபவிக்கும் நிலைக்குப் பெயராகும். இந்தப் பிராரத்த வினை உயிர்ப் பிறவிகளை, ஆதி தெய்விகம் - ஆதிபௌதிகம் - ஆத்யாத்மிகம், என்ற பெயர்கொண்டு பல வழிகளிலும் இடர்களை விளைவிக்கும். ஆதிதெய்விகம் என்பது தாயின் கர்ப்பப்பையிற் கிடந்துழலச் செய்வது. மக்கள் விரும்பாத நரை, திரை முதலிய இயல்பான துயரங்களைத் தருவது. மனக்கவலைகள், நரகவேதனை ஆகிய துன்பங்களாம். ஆதிபௌதிகம் என்பது மண் முதலிய பஞ்ச பூதங்களால் நேரிடும் இடையூறுகளுக்குப் பெயராகும். மண்

விழுவது, கல்விழுவது, மழை, குளிர், வெப்பம், காற்று, இடி, மின்னல் முதலியவற்றால் உயிர்களை வதைப்பது ஆகிய இவை ஆதிபௌதிகம் என்ற வினையின் செயல். நோய்வாய்ப் படுதலாலும், கொடிய மிருகங்கள், விஷ ஜந்துக்கள், திருடர்கள், வஞ்சகர்கள், பகைவர்கள் முதலிய உயிர்ப் பிறவிகளினால் நேரிடும் துன்பங்கள் "ஆத்யாத்மிகம்" என்றுகூறப்படுகிறது. "இத்துன்பங்களினால் நேரிடும் இடர்களைப்போக்க இறைவனை வழிபாடு செய்யுங்கள்" என்று நம் ஆசாரியப் பெருந்தகை திருநாவுக்கரசு சுவாமிகள் அருள்மொழி கூறுகின்றார்.

"உடல்தனைக் கழிக்கலுற்ற உலகத்தில் உயிர்கட்கெல்லாம்
இடர்தனைக் கழிக்கவேண்டின் இறைவனை யேத்துமின்னே"

முத்தியும் பக்தியும் :

உயிர்ப் பிறவிகளுக்கு துயரங்களைச் சூழச்செய்து வேதனையைத் தருவது "பிராரத்தவினை என்று கண்டோம். பிராரத்த வினையால் வரும் துன்பங்களை மண்ணுலகில் பிறந்த எவரும் அறவே நீக்கிவிட முடியாது. சிவபெருமானை அன்புடன் வழிபட்டால் இத்துன்பங்கள் குறைவதோடு துன்பங்களைத் தாங்கும் வலிமையும் நமக்கு ஏற்படும் என்று ஞானநூல்கள் கூறுகின்றன. பிறந்தவர்கள் இறந்து போவது நிச்சயம். பிறப்பிற்கும் சாவிற்கும் இடையிலுள்ள வாழ்க்கையில் உயிர்ப்பிறவிகள் அடையும் இன்னல்களைக் கண்டும் கேட்டும் மனம் வருந்திய அருள்வள்ளல் இராமலிங்க அடிகளார்.

"மண்ணுலகத்திலே உயிர்கள்தாம் வருந்தும்
வருத்தத்தை ஒரு சிறிதேனும்
கண்ணுறப் பார்த்தும் செவியுறக்கேட்டும்
கணமும் நான்சகித்திட மாட்டேன்
எண்ணுறுமெனக்கே நின்னருள் வலத்தால்
இசைத்தபோது இசைத்தபோதெல்லாம்
நண்ணுமவ்வருத்தம் தவிர்க்க நல்வரந்தான்
நல்குதல்எனக் கிச்சைஎந்தாய்"

என்ற அருட்பாவில் தம் இச்சை இதுதான் என்று உள்ளம் உருகி இறைவனை வேண்டினார். பழவினைகள் மூன்றில் "சஞ்சிதம் - பிராரத்தம் என்ற வினைகளால் விளையும் துன்பங்கள் தொலைய சிவவழிபாடு அவசியம் என்பதை யறிந்தோம். இனி

மூன்ருவதாக "ஆகாமியம்" என்ற வினையைப்பற்றி ஆராய்வோம். மரம் முந்தியா? விதை முந்தியா? என்று கேள்வி கேட்பதுண்டு. மரத்திலிருந்து விதையும் விதையிலிருந்து மரமும் தோன்றுவதைக் காண்கின்ருேம். சென்ற பிறவியில் சேமித்து வைத்துள்ள வினைப்பயன்களாகிய துன்பங்களை அனுபவிப்பதே பிராரத்தம் என்று கூறினேம். பிராரத்தவினையை அனுபவித்து வரும்போதே விருப்பு வெறுப்புக்களினல் ஏவப்பட்டுத் திரும்பவும் புண்ணிய பாவங்களைச்செய்து "சஞ்சிதம்" என்ற வினைக்களஞ்சியத்தில் குறைவுவராதபடிஅடுத்தபிறவிக்குக் காரணமாகசேமித்து வருவதே "ஆகாமியம்" என்று சொல்லப்படுகிறது. ஆகாமிய வினையை ஓர் மாமரமாகவும் பிராரத்த வினைகளை மாங்கனிகளாகவும், சஞ்சித வினைகளை மாங்கொட்டை (விதை)களாவும் கற்பனை செய்து பார்த்தால் மிகத்தெளிவாக "கர்மம்" என்ற பழவினைகளின் தன்மை விளங்கும். துன்பங்களினின்று விடுபடுவதற்கே முத்தி என்று பெயர். எல்லா மதங்களும் துயரங்கள் நீங்கவேண்டுமென்று முத்திநெறிகளைக் கூறுகின்றன. முக்திநெறியை முறைப்படி யறியாத மூர்க்கர்களோடு வீண் விவாதம் செய்ய முயலவில்லை. அன்பு மதமான சைவசமயம் மனம், வாக்கு, காயம் இம்மூன்றும் நினைவு - பேச்சு செயல் ஆகிய மூன்றும் எழுகின்ற இடங்கள். இம்மூன்றும் பழவினைகளின் காரணமாகத் துயரங்களிலேயே மூழ்கிவிட்டால் மக்கள் வாழ்க்கையின் குறிக்கோள்தான் என்ன? மக்கள் எல்லோரும் இன்பமாக வாழவேண்டுமென்ற எண்ணம் கொண்ட சமய குரவர்கள் நால்வரும் தம் முழு அன்பையும் சிவபெருமானுக்கே அர்ப்பணம் செய்தனர். அவர்கள் சென்று காட்டிய பக்திநெறியிலேயே நாமும் சென்று நம்மனம் வாக்கு காயங்களை சிவ வழிபாட்டில் ஈடுபடுத்துவோமாளுல் இன்பமே வடிவமான சிவபெருமான் திருவருளால் எல்லா நலன்களும் பெற்றுப் பெருவாழ்வு வாழ்வோ மென்பதில் ஐயமில்லை.

"முத்திநெறி அறியாத மூர்க்கரோடு முயல்வேனைப்
பக்திநெறி அறிவித்துப் பழவினைகள் பாறும்வண்ணம்
சித்தமலம் அறுவித்துச் சிவமாக்கி எனையாண்ட
அத்தன் எனக்கருளியவாறு ஆர்பெறுவார் அச்சோவே



# சஹஸ்ராகமம்

சிவாகம வித்துவான்

திரு. S. சுவாமிநாத சிவாசாரியார்

(மலர் 22, இதழ் 5, பக்கம் 256 இன் தொடர்ச்சி)

निर्दिष्टदिवरात्पूर्वे रात्रौ कौतुक बन्धनम् ।
अभावे तद्दिनेवापि क्रियापूर्वेऽथवा सुधीः ॥ 172

கிரியா கௌசலனை ஆசாரியன் மூர்த்தியை கலாகர்ஷணம் செய்து யாகசாலையில் வைத்து யாகாரம்பம் செய்யக் குறிப்பிடப் பட்ட நாளுக்கு முதல்நாள் இரவு ரக்ஷாபந்தனம் செய்துகொள்ள வேண்டும். அவ்வாறு முடியாவிட்டால், யாகாரம்பம் செய்யும் தினத்தில் முன்போ கிரியை ஆரம்பிக்கும் சமயத்திலோ ரக்ஷா பந்தனம் செய்துகொள்ளவேண்டும்.

तत्तत्कर्म समृध्यर्थ माचार्यो सूत्रधारणम् ।
अहन्यहनि संपूज्य निर्दिष्टदिवसावधि ॥ 173

निर्दिष्ट दिवसे प्राप्ते सोममुद्वासयेत्सुधीः ।
कौतुकांकुर मेवोक्तं वास्तु पूजापुरस्सरम् ॥ 174

செய்யப்படும் அந்த அந்தக் கிரியைகள், நிறைவுபெறுவதின் பொருட்டு ஆசாரியன் ரக்ஷாபந்தனம் செய்துகொள்ளவேண்டும். இவ்வாறு அங்குரம் ரக்ஷைகளுக்கு சாக்ஷிபூதர்களான சோமனை யும் பன்னிரெண்டு சூரியர்களையும் தினம் தினம் கும்பாபிஷேகம் செய்து அவபிருதம் வரையில் பூஜித்து முடிவில் உத்வாஸனம் செய்யவேண்டும். இவ்வாறு ரக்ஷாபந்தனத்துடன் அங்குரார்ப் பணக் கிரியையானது வாஸ்துபூஜைக்குப்பிறகு செய்யவேண்டும் என்பதும் கூறப்பட்டது. இனி யாகசாலையின் அலங்காரம் கூறப்படுகிறது.

प्रभाते विमले धीमान् विधिवत् स्नान माचरेत् ।
वस्त्रैराभरणैर्भूष्य नित्यकर्म समाचरेत् ॥ 175

அறிவாளியான ஆசாரியன் நிர்மலமாக இருக்கும் காலை வேளையில் முறைப்படி ஸ்னானம் செய்து வஸ்திரங்களாலும் ஆபரணங்களாலும் அலங்காரம் செய்துகொண்டு, நித்யானுஷ்டானத்தைச் செய்யவேண்டும்.

शंभोः प्रसन्नपूजार्थं स्नपनन्तु समाचरेत् ।
प्रायश्चित्तं पुराकृत्वा होमसंख्यां हुनेत्क्रमात् ॥ 176

சிவனுக்கு ப்ரஸன்ன பூஜையின்பொருட்டு ஸ்னபனம் வைத்துப் பூஜைசெய்து ப்ராயச்சித்த ஹோமம்செய்து பிறகு மூலமந்திர ஹோமத்தை ஸ்பன ஹோமத்திற்குக் கூறப்பட்ட அதன் எண்ணிக்கை முறைப்படி செய்யவேண்டும்.

गर्भगृहं प्रविश्याऽथपूजयेत्तु यथाविधि ।
नैवेद्य धूपदीपदीनुपचारान्समाप्य च ॥ 177

இவ்வாறு ஸ்னபனபூஜை ஹோமம் செய்தபிறகு, கர்ப்பக்கிரஹத்திற்குச் சென்று, இறைவனுக்கு முறைப்படி சாங்கோபாங்க ப்ரத்யங்கத்துடன் பூஜை நிவேதனத்துடன் தூபம் தீபம் முதலிய உபசாரங்களைச் செய்துமுடிக்கவேண்டும்.

प्रसन्नयजनं चेद्धं कृत्वाऽलंकरणाय च ।
यागशालां विशेद्धीमान् कृत्वालंकरणादिकम् ॥ 178

இவ்வாறு ப்ரசன்னபூஜையைச் செய்து யாகசாலையை அலங்காரம் செய்வதன்பொருட்டு ஆசாரியன் யாகசாலைக்குச் சென்று அங்கு செய்யவேண்டிய அலங்காரத்தைச் செய்யவும். அதாவது,

चतुर्दिक्षु चतुर्द्वारं चतुस्तोरण भूषितम् ।
अष्टदिक्षु ध्वजानष्टौ लंबयेत्तु प्रदक्षिणम् ॥ 179

யாகசாலையின் நான்குபுரமும் நடுவில் நான்குவாயிற்படியும், அதில் நான்கு தோரணங்களும் அமைத்து கிழக்கு முதலிய எட்டு திக்குகளிலும் எட்டுக் கொடிகளைத் தொங்கவிடவேண்டும்.

पूर्वे नीलांशुकं प्रोक्तमाग्नेय्यां रक्तचेलकम् ।
दक्षिणे कृष्ण चेलंस्याद्धूम्रचेलंतु नैरृते ॥ 180

शङ्खाभं वारुणं वस्त्रं वायव्यां शबलं तथा ।
उत्तरे काञ्चनं चेलं मैशान्यां पीतवस्त्रकम् ॥ 181

கிழக்கு திக்கிலுள்ள கொடிச்சேலையானது நீலவர்ணமுள்ளதாக இருக்கவேண்டும். இவ்வாறு தென்கிழக்கில் சிவப்பு வர்ணமுள்ளதாயும் தெற்கில் கருப்புவர்ணமுள்ளதாயும் தென்மேற்கில் புகைவர்ணமுள்ளதாயும் மேற்கில் சங்குபோன்ற நிறமுடையதாயும் வடமேற்கில் கருப்பும் வெண்மையும் கலந்த வர்ணமுடையதாயும், வடக்கில் ஸ்வர்ணவர்ணமுடையதாயும், வடகிழக்கில் மஞ்சள்வர்ணமுடையதாயும் இருக்கவேண்டும்.

त्रयोदशांगुलायामं विंशत्यंगुल दीर्घकम् ।
विस्तारेण समं पुच्छं तदर्धं शिखरं भवेत् ॥ 182

முப்பது அங்குலம் அகலமும் இருபது அங்குலம் நீளமும் அல்லது அகலத்திற்குத் தக்கவாருகினும் இருக்கவேண்டும். அதற்குப் பாதி அளவு சிகரம் இருக்கவேண்டும்.

चतुःपुच्छं त्रिपुच्छ वा पुच्छद्वयमथाऽपिवा ।
ध्वजमध्ये लिखेद्धीमान् दिग्गजांश्च विशेषतः ॥ 183

நான்கு வாலாகிலும் அல்லது மூன்று அல்லது இரண்டு வாலாகிலும் உள்ளதாக இருக்கவேண்டும், அந்தந்தக் கொடிகளின் மத்தியில் அந்த அந்த திக்கிற்குரிய யானைகளை எழுதவேண்டும். ஐராவதம், புண்டரீகம், வாமனம், குமுதம், அஞ்சனம், புஷ்பதந்தன், சார்வபௌமன், சுப்ரதீகன் என்பது அந்த திக் கஜங்களின் பெயராம்.

पार्श्वेतु दलिकायुक्तं वेत्रद्वय समायुतम् ।
नवहस्ताष्टहस्तं च सप्तहस्तमथापिवा ॥ 184

शेषं च ध्वजवत्कुर्यात् नानावस्त्रैश्च कारयेत् ।
पताका लक्षणं प्रोक्तं क्षुद्रध्वज विधीं श्रुणु ॥ 185

இவ்வாறு த்வஜத்தின் லக்ஷணம் கூறி இப்போது பதாகா லக்ஷணம் கூறுகிருர். பதாகை என்பது பெரும்பாலும் கொடியைப் போலிருந்தாலும் பக்கத்தில் தளிகையுடன் கூடியதும் இரண்டு பிரம்புகளால் தாங்கப்பட்டதும், ஒன்பது, எட்டு என்ற முழமுள்ளதாகவோ அல்லது ஏழுமுழமுள்ளதாகவோவுள்ள நீளம் அகலமுள்ளதாக இருக்கவேண்டும். இதற்குமேல் சின்னக் கொடியின் லக்ஷணம் கூறப்படுகிறது.

वाणांगुल सुविस्तारं द्वादशाङ्गुल दैर्घिकम् ।
वेत्रद्वय समायुक्तं शेषं केतुर्यथा कुरु ॥ 186

இந்த சின்னக்கொடியானது ஐந்து அங்குலம் அகலமுள்ள தாயும் பன்னிரண்டு அங்குல நீளமுள்ளதாயும் இரண்டு பிரம்புகளுடன் கூடியதாயும் இருக்கவேண்டும். இதற்குரிய மற்ற லக்ஷணம் கொடியைப் போன்றது.

क्षुद्रध्वज विधिः प्रोक्तो शिखरेपुच्छ संयुतम् ।
तिथिहस्त युतंवापि चार्कहस्त मथापिवा ॥ 187

रन्ध्रहस्त युतंवापि चारुरज्जु समन्वितम् ।
नानावर्ण समायुक्तं नानारूप समन्वितम् ॥ 188

இவ்வாறு சின்னக்கொடியின் இலக்கணம் கூறப்பட்டுப் பின் தரங்கத்தின் இலக்கணம் கூறப்படுகிறது. நுணியில் சிகரத்துடன் கூடியதாய பதினைந்து அல்லது பன்னிரண்டு அல்லது ஒன்பது முழமுள்ளதாய் அழகான கயிற்றில் சேர்க்கப் பட்டதாய் அநேக வர்ணங்களுடன் கூடியதாய் பலவிதமான வடிவமுடையதாய் இருக்கவேண்டும். இது மகரதோரணம் என்று கூறப்படுகிறது.

एवं तरंग माख्यातं संगवेष्टन मुच्यते ।
कृष्णं श्वेतं पूर्वभागे श्वेतरक्तं तु दक्षिणे ॥ 189

रक्तं पीतं पश्चितः पीतकृष्ण मुदग्दिशि ।
गात्रायाम समं वस्त्रं निच्छिद्रं तेन वेष्टयेत् ॥ 190

இவ்வாறு தரங்கத்தின் இலக்கணம்கூறி ஸங்கவேஷ்டனம் என்பதின் லக்ஷணம் கூறப்படுகிறது, யாகசாலையில் சுற்றிலும் அலங்காரமாக இடவெளியில்லாமல் வஸ்திரத்தினல் சுற்றி மறைக்கப்படும் அலங்காரத்திற்கு ஸங்கவேஷ்டனம் என்று சொல்லப்படுகிறது. காவணத்தில் கட்டப்படும் மேக்கட்டி போன்றது. இது கிழக்கில் கட்டப்படும் வஸ்திரம் கருப்பும் வெள்ளையும் கலந்த வர்ணமுள்ளதாயும் தெற்கில் கட்டப்படுவது வெண்மையும் சிகப்பும் கலந்ததாயும் மேற்கில் கட்டப்படுவது சிகப்பும் மஞ்சளும் கலந்ததாயும் வடக்கில் கட்டப்படுவது மஞ்சளும் கருப்பும் கலந்ததாயும் இருக்கவேண்டும், இந்த வஸ்திரங்கள் வெண்பட்டு, சிகப்புபட்டு நூல் இவைகளால் நையப்பட்டதாயும் சுத்தமாயும் இருக்கவேண்டும்.

(தொடரும்)

# மணிமேகலை

[ இலக்கிய நாடகம் ]

" செஞ்சொற்கொண்டல் "

வித்துவான். சொ. சிங்காரவேலன் எம்.ஏ.,

" அரியேறு முன்னுயர்த்த ஆதியான் ; வண்டின்
புரியேறு போதி நிழற்கீழ்ப் — பெரியோன்
அடித்தாமரைமலரை அன்போடும் சென்று
பிடித்தார் பிறவார் பெயர்ந்து "

## காட்சி 1.

காலம் : பகல். உறுப்பினர், முரசறைவோன், மக்கள்.

இடம் : காவிரிப்பூம்பட்டினத்து அரசவீதி.

[ முரசு முழக்கி வள்ளுவன் விழா அறைவோன் பேசுகிறான் ]

பொன்னிநாட்டு மண்ணுக்குத் திலகமென விளங்கும் காவிரிப்பூம்பட்டினத்தில் வாழும் பொதுமக்களுக்கோர் அறிவிப்பு...... " சோழவளநாடு வாழ்க ! சோழவளநாட்டைச் சொர்க்கபுரியாக ஆக்கும் இராசாதி இராச இராச மார்த்தாண்ட சோழப் பேரரசர் வாழ்க ! பசியும், பிணியும் பகையும் நீங்கி, வசியும் வளனும் சுரந்து, நாடு தழைப்பதாக ! அறிஞர்களே! ஆண்டுதோறும் நடக்கும் இந்திரவிழா இவ்வாண்டும் ஈடும் எடுப்புமற்ற முறையில் கொண்டாடப் பெறப் போகிறது.... தெருக்கள் தோறும் பூரணகும்பமும் பொற்பாவிகையும் பாவை விளக்கும் பரப்புங்கள் ! தோரணம்கட்டி வீதி அழகாக்கித் தொல்பெரு விழாவை யாவரும் வியப்பக் கொண்டாடுங்கள் ! நெற்றிக்கண் நிமலனாகிய சிவபெருமான் முதல் சதுக்கப்பூதங்கள் ஈறாக பூசனை புரியுங்கள் ! பந்தரிலும் அம்பலங்களிலும், பண்டிதர்களே ! அறவுரை கூறுங்கள் ! பட்டி மண்டபத்தில், சமய வாதிகளே ! சொற்போர் நடத்துங்கள் ! சினமும் பகையும்

இல்லாமல், செந்தமிழ்ப் பண்பாட்டோடு இந்திர விழாவை இருபத்தெட்டு நாட்களிலும் கொண்டாட வேண்டும்! இது பேரரசரின் உத்தரவு! உத்தரவு! உத்தரவு!

[ மக்கள் திரண்டுநின்று கேட்டுமகிழ்கின்ருர்கள் ]

## காட்சி 2

காலம் : மாலே

காவிரிப்பூம்பட்டினத்துத் தோற்றம்.

இந்திரவிழாக்காட்சி : உறுப்பினர், மன்னன் முதல் பலரும்.

[ நகரத்தின் திருவீதிகளில் மக்கள் ஆடவரும் பெண்டிருமாக மகிழ்ச்சி நடை போடுகிருர்கள். எங்கும் ஒரே மக்கட் பெருங்கூட்டம்; யாவரும் மகிழ்ச்சியோடு உலவுகிருர்கள். பட்டினப்பாக்கமும், மருவூர்ப்பாக்கமும் பொலிவுறுகின்றன. ஐவகை மன்றங்களிலும், மற்றும் கடவுளர் கோயில்களிலும் யாண்டும் ஆயிரங் கண்ணேனுக்குப் பூசனை நடக்கிறது. மன்னனும் தன் குடும்பத்தோடு விழாவிற் கலந்துகொள்கிருன். திருவீதியில் மன்னன் ஊர்வலம் வருகிறது.]

ஏவலன் : இராதி ராச இராச மார்த்தாண்ட சோழகுலச் சக்ரவர்த்தி விற்கொடியையும் மீனக்கொடியையும் வெற்றி கொண்ட சோழமகாராஜா! வாழ்க......

அனைவரும் : வாழ்க! வாழ்க!

[ மன்னனும், இளவரசனும், ஊர்வலத்தினின்று இழிந்து வச்சிரக்கோட்டத்தை வணங்கி ]

சோழன் : பொன்னன மக்களே! இன்று இந்திரவிழா எடுக்கிரேம்; நம்நாட்டுச் சமுதாயமும் அரசாங்கமும் இணைந்து நடத்தும் இது நம்நாட்டுக்கே ஒரு பொதுவிழாவாகும்; தமிழர் தெய்வமாகிய அகத்திய முனிவரின் அருளாணைப்படி, இச் சோழநாட்டைப் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு ஆண்ட சக்ரவர்த்தி, தூங்கெயிலெறிந்த தொடித்தோட் செம்பியர் இருபத்தெட்டு நாள் இந்தப் பூம்புகாரிலே இந்திரவிழா எடுத்திருக்கிருர். அதன்பிறகு ஆண்டுதோறும் சித்திரைப் பௌர்ணமியிலே

வானுலக அண்ணலுக்கு வழிபாடு நடத்தி வருகிறது சோழர் அரசு. இதோ வச்சிரக் கோட்டத்திலே, தமிழகத்துத் திரு மண்ணை மழையால் வளப்படுத்தும் விண்ணவர் கோமான் வீற்றிருக்கிறார்; 'வான்பொய்ப்பினும் தான்பொய்யா மலைத்தலைய கடற்காவிரி' என்று பட்டினப்பாலை பாராட்டும் பண்பு நம் காவிரியன்னைக்கு அமைந்ததென்றால் அது இப்பெரியோன் பேரருளேயாகும்; அனைவரும் அப்பெருமானை ஏத்துவோம்! தமிழர் புலிக்கொடி உலகு முழுவதும் தாவிப் பறக்கச் செயலாற்றுவோம் என்று உறுதி கூறுவோம்; திருவடி பாடுவோம்.

[ அரசியல் கணிகை இந்திரனை வாழ்த்திசைக்கிறாள். ]

ஏவலன் : இராதிராச இராசமார்த்தாண்ட சோழகுல சக்கரவர்த்தி விற்கொடியையும் மீனக்கொடியையும் வெற்றிகொண்ட சோழமகாராஜா ! வாழ்க ! வாழ்க !

[ ஊர்வலம் நகர்கிறது ]

[ திருவீதியில் ஒருபால் ]

சித்திராபதி : வசந்தமாலை ! வசந்தமாலை !

வசந்தமாலை : அழைத்தீர்களா தாயே !

சித்திரா : ஆம்; செல்வி ! மணிமேகலையும், மாதவியும் இந்திரவிழாவுக்கு ஏன் வரவில்லை ?

வசந்த : தாயே ! இது மாதவியைக் கேட்கவேண்டிய கேள்வி !

சித்திரா : வசந்தமாலை ! விளையாடும் நேரம் இதுவல்ல; நமது பெருநாட்டின் முக்கியமான திருவிழா இது; இதில் கணிகையர் குல விளக்கு மாதவியும், கலையரசி மணிமேகலையும் வரவில்லையென்றால்......

வசந்த : கலை உலகத்துக்கே இழுக்கு !

சித்திரா : எங்கேயடி போனார்கள் ? மன்னர் திருமுன்பு ஆடலழகி மாதவி இல்லாததுபற்றி எத்தனைபேர் என்னை ஏளனக் குறிப்போடு பார்த்தார்கள் தெரியுமா ? இப்படிப்பட்ட மகளைப் பெற்றெடுத்த எனக்கு இதுவும் வேண்டும்; இன்னமும் வேண்டும் !

வசந்த : வருந்தாதீர்கள் தாயே! இதோ மாதவிபால் சென்று வருகிறேன்!

சித்திரா : வசந்தமாலே! போ! போய்ச்சொல்; பொன்னி நாட்டின் கலைவிளக்கு குடத்துள் விளக்காகவா இருக்கவேண்டும் என்று கேள்! ஒப்பற்ற ஆடலழகி... பெரு வணிகமன்னன் கோவலனை மயக்கிய குறுந்தொடி... அரங்குக்கு வராததால் அழகிழந்தது அரங்கென்று கூறு!

(கண்ணீர் விடுகிருள்; வசந்தமாலே மாதவி மண்டபம் நோக்கிப் போகிருள்)

சித்திரா : காலமெல்லாம் என் அழகை விலையாக்குகிறேன்; பரத்தைத் தொழிலுக்கோர் உதாரணமாய் விளங்குகிறேன்! என்வயிற்றில் இப்படி ஒரு அழகான மாணிக்கம் பிறந்தும்... காதலாம் காதல்! புரியாத போதை நன்ருகத் தலைக்கேறி விட்டது மாதவிக்கு!

( திரை ) (தொடரும்)

---

## EXTRACT FROM THE VISITORS' BOOK

Dharmapuram Adhinam

Sri Vaithianathaswami Devasthanam, Vaithiswarankoil.

I had the rare opportunity of visiting this temple. It is neatly kept up. The poojas performed are stirring the soul. We had the satisfaction of having achieved the "Arul" of Lord Muruga.

(Sd.) Ramalingam,
27—1—63. Divisional Engineer, Highways,
Nagapattinam.

A magnificient temple.

(Sd.) S. R. Bashyam,
29—1—63. Post Master General, Madras.

உ

திருச்சிற்றம்பலம்

# வாழ்த்துரை

திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனம் 25 ஆவது குருமூர்த்தியாக எழுந்தருளி அருளாட்சி புரிந்துவரும் ஸ்ரீலஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் திவ்ய சமுகத்திற்குச் சென்னை புரசைவாக்கம் இந்திய இளைஞர் சங்கத்தின் சார்பாக வாசித்தளித்த வாழ்த்துரை.

தருமையமர் குருமணியே!

திருக்கயிலாய பரம்பரையில் தருமை ஆதீனத்துக் குருமணியாய்த் தாங்கள் எழுந்தருளி, உலகமாந்தர் செவ்வியநெறிநின்று கடைத்தேறும் வண்ணம் சமயப்பணி புரிந்துவரும் நல்லாட்சித் திறம் கண்டு வியவாதவரும் உண்டோ?

சைவமும் தமிழும் தழைத்து இனிதோங்க அமிழ்தம்
என்னத்தோன்றும் அண்ணலே!

அமிழ்தினும் இனிய தமிழ்நூல்களையும், ஆங்கிலம், வடமொழி நூல்களையும் நன்கு ஆய்ந்து, தொகுத்து, பதிப்பிக்கும்படி செய்து, தவநெறியாம் சிவநெறியின் பெருமையினை எவரும் அறிந்து இன்புறுமாறு தாங்கள் செழிப்புற நடத்திவரும் தெய்வப்பணியைத் தமிழ் கூறும் நல்லுலகம் மறப்பதற்கில்லை.

எத்திசையும் புகழ்மணக்க ஞானச்செங்கோல் ஏந்துமா
துறவரசர் ஏறே!

உள்மாசு அகற்றி ஒளி உருவாக்கும் சுப்ரமண்ய தேசிக சத்குருமூர்த்தியே! அருள்ஒளி வீசி ஆன்மவழிகாட்டும் ஆசிரிய நாயகமே! தனக்கென வாழாப் பிறர்க்குரியாளராம் பெருந்தகையே! நாவலர் போற்றும் நற்பெரும் குரவ! செக்கர் வார் சடைச் சொக்கநாதப்பெருமான் பொற்கழல் போற்றும் புண்ணிய புருஷரே! வெள்ளியங்கிரியின் விழுமிய தோற்றத்தை அள்ளிப் பருகிய ஆனந்தத்தில் துள்ளல்தேக்கும் சுப்ரமண்ய தேசிகத் தூயோய்! தங்களுடைய அருள் திருஆட்சிக்கு வெள்ளி விழா, பொன் விழா முதலான விழாக்கள் கொண்டாடும் பேறு எம் போன்றார்க்குக் கிட்டும்வண்ணம் அருளுருவாகும் எல்லாம்வல்ல இறைவன் அருள் பாலிப்பானாக.

இங்ஙனம்,

**இந்திய இளைஞர் சங்கத்தார்**

# செய்திகள்

## தருமையாதீனத்தில்

### ஸ்ரீ வன துர்க்கை பிரதிஷ்டை

சுபகிருது ஆண்டு பங்குனிமீ 28உ புதன்கிழமை ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணியவர்களின் திருவுள்ளப்பாங்கின் வண்ணம் ஸ்ரீ ஆனந்தபரவசர் பூங்காவில் ஸ்ரீ வனதுர்க்கை பிரதிஷ்டை செய்யப்பட்டு கும்பாபிஷேகமும் நிகழ்த்தப்பட்டது. அன்று மாலை சிறப்பு வழிபாடு நிகழ்த்தப்பெற்றது. ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள் எழுந்தருளி வழிபாடாற்றினர்கள் அன்பர்கள் பலர் தரிசித்து உய்தி பெற்றனர்.

### புத்தாண்டு வழிபாடு

சோபகிருது ஆண்டு சித்திரைத்திங்கள் முதல் நாள் ஞாயிற்றுக்கிழமையன்று ஸ்ரீ வனதுர்க்கைக்கு சிறப்பு வழிபாடு நிகழ்த்தப்பெற்றது. அன்று மாலை நவசக்தி அருச்சனை சிறப்புற நிகழ்ந்தேறியது. ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணியவர்கள் எழுந்தருளி வழிபாடாற்றினர்கள். மாயூரம் முதலிய பல்வேறு இடங்களிலிருந்தும் அன்பர்கள் பலர் திரண்டு அம்பிகையை வழிபட்டு உய்ந்தனர். அன்பர்கட்கு மாலை சிற்றுண்டி அளிக்கப் பட்டது.

### சித்திரைச்சதய விழா

சோபகிருது ஆண்டு சித்திரைமீ 7-ஆம் நாள் (20—4—63) சனிக்கிழமையன்று திருநாவுக்கரசு சுவாமிகள் குருபூஜைத் திருநாளாகிய சதயத்திருநாள். அன்று ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி யவர்கள் ஞானபீட மேறிய சுபதினம். ஸ்ரீ ஞானபுரீசுவரர், ஸ்ரீ ஞானம்பிகை, சமயாசாரியார்கள் ஆகிய மூர்த்திகட்கு விசேஷ அபிஷேக ஆராதனைகள் நிகத்தப்பெற்றன. ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள் எழுந்தருளி வழிபாடாற்றி

னர்கள். இரவு திருநாவுக்கரசு சுவாமிகள் திருவீதியுலா நிகழ்ந்தது! திருவீதியுலாவின்போது திருமுறைப் பாராயணம் நடைபெற்றது அற்புதத் திருப்பதிகங்கள் வரலாற்றைக் கல்லூரிப் பேராசிரியர்கள் விளக்கினர்கள். ஸ்ரீகயிலாய நிலையத்திற்கு எதிரே சிவிகை எழுந்தருளியதும் கயிலாயத் திருவுருவப் படத்திற்கு ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமாகாசந்நிதானம் அவர்களால் சிறப்புவழிபாடு நிகழ்த்தப்பெற்றது. அன்பர்கள் பலருக்கும் சித்திரான்னங்கள் வழங்கப்பெற்றன.

## இந்திய இளைஞர் சங்கத்தினர் தருமைக்கு வருகை!

சென்னை புரசவாக்கம் இந்திய இளைஞர் சங்கத்தினர் முன்னுள் சென்னை அறநிலையத்துறை அமைச்சர் திரு. வேங்கடசாமி நாயுடு அவர்கள் தலைமையில் 20—4—63 சனிக்கிழமையன்று பேருந்து மூலம் தருமைக்கு வந்து சேர்ந்தனர்.

சுற்றுலாக் குழுவினர் திருமடத்தின் பல்வேறு இடங்களையும், திருக்கோவில்களையும் கண்டு களித்தனர். திருக்கோவில்களில் விசேஷ வழிபாடுகள் நிகழ்த்தப்பெற்றன. பின்னர் சுற்றுலாக் குழுவினர் ஸ்ரீலஸ்ரீ கயிலை குருமகாசந்நிதானம் அவர்களைத் தரிசித்து தங்கள் அன்பின் அடையாளமாக ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி அவர்கட்கு வாழ்த்துரை ஒன்றை வாசித்தளித்தனர்.

ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானத்தின் ஆசியுரையில் பலவேறு வகைப்பட்டவர்கள் ஒன்றுகூடி இவ்வாறு தலவழிபாட்டை வேங்கடசாமி நாயுடு அவர்கள் தலைமையில் மேற்கொண்டது பாராட்டுக்குரியது. நாயடு அவர்களால் திருப்பதி தேவஸ்தானத்தில் பல பெரிய சீர்திருத்தங்கள் செய்யப்பெற்றன. தற்போது வந்து வழிபடுபவர்களுக்கு மிக்க வசதிகள் ஏற்படுத்தப்பட்டன. வழிபாட்டில் ஈடுபாடுடைய நாயுடுவைப் போன்றவர்கள் இவ்வாறு வழிபாட்டில் ஈடுபடுவது மற்றவர்களுக்கும் வழிபாட்டுணர்ச்சி பெருக வாய்ப்பாகும் என்பனபோன்ற கருத்துக்களை வழங்கினர்கள். இரவு குழுவினர்கட்கு விருந்து அளிக்கப்பெற்றது. ஆதீன வெளியீடுகள் சங்கத்தினர்கட்கு வழங்கப்பட்டன.

சங்கத்தினர் மாயூரம் குமரக்கட்டளை ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி தேவஸ்தானத்திற்கும், விளநகர் ஸ்ரீ துறைகாட்டும் வள்ளலார்சுவாமிதேவஸ்தானத்திற்கும் வைத்தீஸ்வரன்கோயில் ஸ்ரீ வைத்தியநாதசுவாமி தேவஸ்தானத்திற்கும் சென்று வழிபட்டார்கள்.

## ஆதீன தேவஸ்தானங்களில்

# சித்திரைத்திங்கட் பெருவிழா

**சீகாழியில் :**

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனத்திற்குச் சொந்தமான சீகாழி ஸ்ரீ சட்டைநாதசுவாமி தேவஸ்தானத்தில் 28-4-63 முதல் 7—5—63 முடிய உள்ள நாட்களில் சித்திரைத்திங்கட் பெருவிழா மிக்க சிறப்புடன் நிகழ்ந்தது.

29-4-63 திங்கட்கிழமை திருஞானசம்பந்தருக்குத் திருமுலை பால் அருளிய திருநாள். ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள் எழுந்தருளி திருஞானசம்பந்தர் புறப்பாட்டின்போது அருளுரை வழங்கினர்கள். பின்னர், திருவாசகமணி திரு. K. M. பாலசுப்பிரமணியம் அவர்கள் ஞானசம்பந்தர் அற்புதங்களை விளக்கிச் சொற்பொழிவாற்றினர்கள். அன்று பிரம தீர்த்தக்கரையில் கூடியிருந்த திரளான மக்களுக்குப் பால் நிவேதனஞ்செய்து வழங்கப்பட்டது. திருஞானசம்பந்தர் வரலாற்றுடன் கூடிய கோயில் பற்றிய விளக்கங்களடங்கிய தொகுப்பு எல்லோருக்கும் வழங்கப்பட்டது.

நாள்தோறும் விழா நாட்களில் சொற்பொழிவுகள் நிகழ்த்தப் பெற்றன. கயப்பாக்கம், திரு. சோமசுந்தரம் செட்டியார் அவர்கள் 28—4—63 முதல் 4—5—63 முடிய உள்ள நாட்களில் மாலை 6-மணி முதல் திருஞானசம்பந்தர் புராணப் பிரசங்கம் நிகழ்த்தினர்கள். பின்னர் சொற்பொழிவுகள் நிகழ்ந்தன.

4—5—63 சனிக்கிழமை திருமுறைவிழாவும் தேவாரவகுப்பு ஆண்டுவிழாவும் நிகழ்ந்தன. அண்ணமலைப் பல்கலைக்கழகத் தமிழ் ஆராய்ச்சித்துறைத் தலைவர் வித்துவான், திரு. ஜி. சுப்பிரமணிய பிள்ளை எம். ஏ., பி. எல்., "அப்பர் விருந்து" என்ற தலைப்பில் சொற்பொழிவாற்றி தேவாரவகுப்பு மாணவர்களுக்குப் பரிசுகளை வழங்கினர்கள். தருமையாதீனப் பல்கலைக்கல்லூரித் தமிழ்ப்பேராசிரியர் 'திருநெறிச்செம்மல்' வித்துவான். திரு. வி. சா. குருசாமி தேசிகர் "அருட்கடலும் அன்புக்கடலும்" என்ற தலைப்பில் சொற்பொழிவாற்றினர்கள். பண்ணிசைவாணர்களின் திருமுறைப் பாராயணத்தொடு யானைமேல் ஒப்பனை செய்யப் பெற்ற திருமுறைகள் திருவீதியுலா நிகழ்ந்தது.

திருப்பனந்தாளில்

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனத்திற்குச் சொந்தமான திருப்பனந்தாள் ஸ்ரீ அருணஜடேசுவரசுவாமி தேவஸ்தானத்தில் 28—4—63 ஞாயிற்றுக்கிழமை முதல் 7—5—63 செவ்வாய்க்கிழமை முடிய உள்ள நாட்களில் சித்திரைத்திங்கட் பெருவிழா மிக்க சிறப்புடன் நிகழ்ந்தது. 7—5—63 செவ்வாய்க்கிழமை பஞ்சமூர்த்திகளும் அணைக்கரைக்கு எழுந்தருளிக் கொள்ளிடத்தில் தீர்த்தம் கொடுத்தருளல் நிகழ்ந்தது. விழா நாட்களில் மாலை 6 மணி முதல் அறிஞர்களின் சமயச் சொற்பொழிவுகளும் இன்னிசை நிகழ்ச்சிகளும் நடைபெற்றன.

1—5—63 புதன்கிழமை திருமுறை விழாவும் தேவாரவகுப்பு ஆண்டுவிழாவும் நிகழ்ந்தன. அண்ணுமலைப் பல்கலைக் கழகத் தமிழ் விரிவுரையாளர் வித்துவான், திரு. வீ. உலகவூழியர் "சைவமும் குமரகுருபரரும்" என்ற தலைப்பில் சொற்பொழிவாற்றினுர்கள். தேவாரவகுப்பு மாணவர்களுக்குப் பரிசுகள் வழங்கப்பட்டன. இரவு, பண்ணிசைவாணர்களின் திருமுறைப் பாராயணத்தொடு திருமுறைகள் ஒப்பனை செய்யப்பெற்று யானைமேல் திருவீதியுலாவாகக் எழுந்தருள்விக்கப்பெற்றன.

7—5—63 செவ்வாய்க்கிழமை கொள்ளிடக்கரையில் கலைமகள் ஆசிரியர் வித்துவான் திரு. கி. வா. ஜகந்நாதன் எம். ஏ. அவர்கள் "அருள்வீரம்" என்ற தலைப்பில் பேசினுர்கள். பின்னர் தஞ்சை திருமதி டி. ஆர். கமலாமூர்த்தி குழுவினரால் "காரைக்காலம்மையார்" கதை காலக்ஷேபமாகச் செய்யப் பெற்றது.

திருவையாற்றில்

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனத்திற்குச் சொந்தமான திருவையாறு ஸ்ரீ பஞ்சநதீசுவரசுவாமி தேவஸ்தானத்தில் சித்திரைத்திங்கட் பெருவிழா 28—4—63 ஞாயிற்றுக்கிழமை தொடங்கி பத்து நாட்கள் சிறப்புற நிகழ்ந்தன. 2—5—63 வியாழக்கிழமை தன்னைத்தான் பூஜித்த திருநாள். இறைவன் வெள்ளிரிஷபவாகனத்தில் எழுந்தருளி சந்நிதிமுன் மாகேஸ்வர பூஜை செய்தல். இச்சிறப்பு நிகழ்ச்சி கண்கொள்ளாக் காட்சியாயிருந்தது. இது திருவையாற்றுக்கேயுரிய சிறப்பு நிகழ்ச்சி. 9—5—63 வியாழக்கிழமை சப்தஸ்தான பிரதக்ஷிணம் செய்தருளல். 10—5—63 ஏனைய ஆறூர் சுவாமிகளுடன் ஐயாற்றுக் கோயிலுக்குள் ஐயாறப்பர் வரும் ஆனந்தக் காட்சி. 9—5—63

திருவையாற்றுச் சிறப்பு நிகழ்ச்சிகளும் வரலாற்றுச் சுருக்கமும் அமைந்த ஒரு சிறு தொகுப்பு வெளியிட்டு அன்பர்களுக்கு வழங்கப்பட்டது. திருவிழா நாட்களில் அறிஞர்களின் சமயச் சொற்பொழிவுகளும், சிறந்த இன்னிசை நிகழ்ச்சிகளும் நடைபெற்றன.

### திருக்கடவூரில்

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனத்திற்குச் சொந்தமான திருக்கடவூர் ஸ்ரீ பஞ்சநதீசுவரசுவாமி தேவஸ்தானத்தில் சித்திரைத்திங்கட் பெருவிழா சித்திரைமீ 7-ஆம் நாள் (28—4—63) முதல் சிறப்புற நிகழ்ந்தது. 3—5—63 வெள்ளிக் கிழமை மார்க்கண்டேயர்க்காகக் காலனைக் கடிந்த திருநாள். அன்று காலசம்காரமூர்த்தியின் காலசம்கார சேவையும் தருமராஜாவுக்கு அனுக்கிரகித்தருளுதலும் மிக்க சிறப்புடையவை. ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானம் அவர்கள் எழுந்தருளி வழிபாடாற்றினர்கள். அன்றைய சிறப்பு நிகழ்ச்சி குறித்து, திருக்கடவூர்த் தலச்சிறப்பு முதலியவற்றுடன் சிறுதொகுப்பு வெளியிடப்பட்டு அன்பர்களுக்கு வழங்கப்பட்டது. விழா நாட்களில் அறிஞர்களின் சமயச் சொற்பொழிவுகளும் இன்னிசை நிகழ்ச்சிகளும் நடைபெற்றன.

## சென்னை, தருமையாதீன மடலாய தேவாலய சமயப்பிரசார நிலையம்

## மாதாந்தர சமயப் பிரசார வழிபாடு

சென்னைத் தியாகராயநகரில் உள்ள தருமபுர ஆதீன மடாலய தேவாலய சமயப்பிரசார நிலையத்தின் மாதாந்தர சமயப்பிரசார வழிபாடு சென்னைக் கோமளேஸ்வரன்பேட்டையில் உள்ள ஸ்ரீ கோமளேஸ்வரர் கோயிலில் சிறப்பாக நடைபெற்றது. வழிபாட்டுக் குழுவினரை ஷை கோயில் அறங்காவலர்களும், ஊர்ப்பொதுமக்களும் வரவேற்று வழிபாட்டையும். சமயப் பிரசாரத்தையும் உடனிருந்து நடத்திவைத்தனர். வழிபாட்டுக் குழுவினர் சார்பில் ஸ்ரீ கோமளாம்பிகைக்கும், ஸ்ரீ கோமளேஸ்வரருக்கும் விசேஷ அபிஷேக ஆராதனை நிகழ்த்தப்பெற்றது. நிலையத் திருமுறை வகுப்பு ஆசிரியர் திரு. P. சுவாமிநாதன் வழிபாட்டுக் காலத்திலும் பிரசாரத்திலும் திருமுறைப் பாடல்களை இசையோடு ஓதி மகிழ்வித்தார். வழிபாட்டின்பின்னர் ஸ்ரீமத். சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் தலைமையில் சமயப்பிரசாரம்

நடைபெற்றது. திரு. K. கமலக்கண்ணன், M. L. C. திரு. என். ஆர். முருகவேள், திரு. நல். முருகேச முதலியார், திரு. S. திருநாவுக்கரசு, திரு. R. சண்முகசுந்தரஞ் செட்டியார், திரு. நடராஜன் ஆகியோர் சமயவாழ்வால் வரும் நன்மைபற்றியும் வழிபாட்டினால் வரும் வளமை பற்றியும், வடநாட்டில் சிவநெறி பரவியுள்ள முறைமை பற்றியும் விளக்கிப் பேசினார்கள். சுவாமிகள் தமது தலைமையுரையில் கோமளமாகிய பசு வழிபட்ட தால் இத்தலம் கோமளேஸ்வரன்பேட்டை என்று பெயர்பெற்றது என்றும், ஐந்தறிவுடைய பசுவே இறைவனைப் பூசிக்கும்போது ஆறறிவுபடைத்த மக்கள் ஆண்டவனை முறையாக வழிபடுவது அவசியமாக வேண்டப்படுவது என்றும் குறிப்பிட்டார்கள். குழுவினர் வழிபாட்டிற்கு முன்னர் சிவபுராணம் ஓதி மாடவீதி வலம் வந்தனர். திரு. P. சுவாமிநாதன் கடவுள் வாழ்த்துப் பாடினார்.

## சோபகிருது வருஷப்பிறப்பு விழா

சென்னை சமயப்பிரசார நிலையத்தில் 14—4—'63 மாலை சோபகிருது வருஷப் புத்தாண்டு விழா மிகச் சிறப்பாகக் கொண்டாடப்பெற்றது. சென்னை அரசாங்க முன்னாள் துணைச் செயலாளர் ராவ்சாகிப், திரு. எஸ். முருகேச முதலியார் அவர்கள் விழாவிற்குத் தலைமை வகித்தார்கள். "ஜோதிஷமணி" ஆசிரியர் திரு. V. K கிருஷ்ணமாச்சாரியார் பஞ்சாங்கப் படன விளக்கம் செய்கையில் இந்த ஆண்டில் செவ்வாய் அரசராகவும், சூரியன் அமைச்சராகவும் இருப்பதால் காற்று, தீ, ஆகியவற்றால் சேதமும். தலைவர்களுக்குள் விரோதமும், யுத்தபயமும் உண்டாகுமென்றும், தான்ய விளைவும், மழையும் நடுத்தரமாக இருக்குமென்றும் குறிப்பிட்டார்கள். பீகார் இராஜ்யத்தைச்சேர்ந்த ஜமால்பூரில் உள்ள "ஆனந்த மார்க்கம்" ஸ்ரீ பிரணவானந்த அவதூத சுவாமிகள் "யோகமுறையில் விஞ்ஞானம் மெய்ஞ்ஞானமும்" என்பது பற்றி ஆங்கிலத்தில் சொற்பொழிவாற்றினார்கள். ஆற்றுகையில், யோகப் பயிற்சி சுகாதார முறையில் உடலை வளர்ப்பதோடு உயிரையும் வளர்க்கப் பேருதவி புரிகிறது என்றும். யோக முறைகளைப் பயிற்சி பெற்றவர்களிடமே பயிலவேண்டும் என்றும் குறிப்பிட்டார்கள். ஸ்ரீமத். சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் வரவேற்புரையும் நன்றியுரையும் கூறுகையில் தெலுங்கு வருஷப் பிறப்பு எந்தக்கிழமையில் பிறக்கிறதோ அக்கிழமைக்குரிய கிரகமே அரசர் என்றும், தமிழ் வருஷப் பிறப்பு எந்தக் கிழமையில் பிறக்கிறதோ அக்கிழமைக்குரிய கிரகமே மந்திரி என்றும்,

அம்முறைப்படி இந்த ஆண்டில் தெலுங்கு வருஷப் பிறப்பு செவ்வாயன்று வந்ததால் செவ்வாய் அரசராளுரென்றும், தமிழ் வருஷப் பிறப்பு ஞாயிறன்று வந்ததால் சூரியன் மந்திரியாளு ரென்றும், இம்முறை ஆண்டு தோறும் தவருது நிகழ்வது என்றும் குறிப்பிட்டார்கள். நிலேயத் திருமுறை வகுப்பு ஆசிரியர் கடவுள் வணக்கமும் வாழ்த்தும் பாடினர்.

## அப்பர் சுவாமிகள் குருபூஜை விழா.

சென்னே சமயப்பிரசார நிலேயத்தில் 20—4—63 சனிக் கிழமை மாலே 6-30 மணிக்கு அப்பர் சுவாமிகள் குருபூஜை விழா சிறப்பாகக்கொண்டாடப்பெற்றது. டாக்டர். திரு. பா. நடராஜன் M A., M. L. A., அவர்கள் விழாவிற்குத் தலேமை வகித்தார்கள். "திருக்கோயில்" ஆசிரியர் திரு. N. R. முருகவேள் M. A., M. O. L., அவர்கள் அப்பர் அருள் மொழிபற்றி விரிவுரை ஆற்றினர்கள். ஆற்றுகையில் சமீப காலம் வரை வாழ்ந்திருந்த காந்தியடிகள் மேற்கொண்டிருந்த சத்தியம், சத்தியாக்கிரகம். ஆடம்பரமின்றி வாழ்தல் முதலிய பண்புகளேயும் கி. பி. ஏழாம் நூற்ருண்டிலேயே தம் வாழ்க்கையில் மேற்கொண்டு வாழ்ந்து காட்டி வெற்றி கண்டவர் அப்பர் சுவாமீகள் என்றும், "தமிழன்" என்ற சொல்லே இலக்கியத்தில் முதன் முதலில் அமைத்தவர் அப்பர் என்றும், எளிய, இனிய நடையில் உலக நிலேயாமையைக்கூறி உண்மையை உணரச் செய்யும் ஆற்றல் இவரது பாடல்கட்கு உண்டு என்றும் எடுத்துக்காட்டுக்களுடன் விளக்கினர்கள். தலேவர் தமது தலேமையுரையில் குறிப்பிட்டதாவது: "கி. பி. முன்னூறு ஆண்டுகட்கு முன்னர் சமணர்கள் திரள் திரளாக தென்னுட்டிற்குத் வந்தனர். வந்தவர்கள் தமிழ்மொழி வளர்ச்சியில் ஈடுபடுவதன்மூலம் தங்கள் சமண சமயத்தையும் வளர்த்தார்கள். அவர்கள் வழியில் மக்களேக் கவர்ந்தார்கள். ஆட்சி அவர்கள் கைக்கு மாறியது. கி. பி. மூன்ரும் நூற்ருண்டில் களப்பிரர்கள் ஆளத்தொடங்கினர்கள். இருண்ட காலச்சூழ்நிலேயாகிய கி. பி. ஆரும் நூற்ருண்டின் பிற்பகுதியில்தான் அப்பர் தோன்றி தமிழர்களின் தொன்மைச் சமயமாகிய சிவநெறியைப் போற்றி வளர்த்தார். சோழ மன்னர் காலத்தில் சுசீந்திரத்தில் அப்பர் அடைந்த சதய நட்சத்திரத்தில் பிரமோற்சவம் நடத்தியுள்ளனர். மொழி, பண்பாடுகளே முன்னே அனுப்பி, பின்னே ஆட்சியைக் கைப்பற்றுதல் அன்றும் இருந்தது என்பதற்கு அப்பரடிகள் வரலாறு சிறந்த சான்று. பாலகங்காதரதிலகர் போன்றவர்கள் படித்தவர்களிடையே

காங்கிரஸ் கொள்கைகளைப் பரப்பினார்கள். காந்தியடிகள் படித்தவர்களிடையேயும், பாமரர்களிடையேயும் காங்கிரஸ் தத்துவங்களைப் பரப்பினார்கள். அதைப்போல் ஆதிசங்கரர் பண்டிதர்களிடையே அத்வைத சித்தாந்தத்தைப் பரப்பினார்கள். சமயாசாரியர்கள் பண்டிதர்களிடையேயும், பாமரர்களிடையேயும் சுத்தாத்வைத சைவத்தைப் பரப்பினார்கள். சமயத் தலைவர்கள் அரசியலில் செல்வாக்குப் பெறவேண்டும். ஆனால் ஆதிக்கம் பெறக்கூடாது".

ஸ்ரீமத். சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் வரவேற்புரையும் நன்றியுரையும் கூறுகையில், தமிழ்ப் பண்பையும், சைவ நெறியையும், தமிழகத்தின் வடஎல்லையில் பாதுகாத்தவர் திருநாவுக்கரசராகிய அப்பரே என்றும், தென்எல்லையைக் காத்தவர் ஞானசம்பந்தர் என்றும், இத்தகைய அப்பர் அவதாரத் தலமாகிய திருவாமூரில் (பண்ணுருட்டிக்கருகில்) அப்பர் சுவாமிகள் மடாலயம் கட்டப்பட்டு பூர்த்தி அடையும நிலையில் உள்ளது என்றும், இதன் கும்பாபிஷேகம் 3—7—63 அன்று நடைபெற உள்ளது என்றும், தமிழர்களும், செல்வர்களும் தமது நன்றியைப் புலப்படுத்திக்கொள்ளும வகையில் ஏராளமாகப் பொருள்வழங்கி அவரது அருளைப்பெறவேண்டுமென்றும், அக்கும்பாபிஷேகத்தைப் பெருவிழாவாகக் கொண்டாடவேண்டுமென்றும் குறிப்பிட்டார்கள். திரு. P. சுவாமிநாதன் கடவுள் வணக்கமும், வாழ்த்தும் பாடினார். இன்சினியரிங் காண்ட்ராக்டர் திரு. S. திருநாவுக்கரசு நாயனார் உபயத்தில் அப்பர் சுவாமிகட்கு சிறப்புவழிபாடு நிகழ்த்தப்பெற்று அனைவர்க்கும் அருட்பிரசாதம் வழங்கப்பெற்றது.

## மாதாந்தர சமயப்பிரசார வழிபாட்டின் நான்காவதாண்டு நிறைவு விழா

சமயப் பிரசார நிலைய " மாதாந்தர வழிபாட்டின் நான்காவதாண்டு நிறைவு விழா " சென்னை ஸ்ரீமல்லீசர் ஆலயத்தில் சிறப்பாக நடைபெற்றது. வழிபாட்டுக்குழுவினர் முதலில் சிவபுராணம் ஓதிக்கொண்டு மாடவீதி வலம்வரும்போது கந்தகோட்டம் ஸ்ரீ கந்தசாமிக்கோயிலை வழிபட்டனர். பிறகு ஸ்ரீ சென்னகேசவப் பெருமாள் கோயிலிலும், சென்னை ஸ்ரீ மல்லீசர் கோயிலிலும் முறையே வழிபாடு நிகழ்த்தினர். குழுவினரை ஷ கோயில் பரம்பரைத் தர்மகர்த்தா ஸ்ரீ S. இராமகிருஷ்ண முதலியாரவர்களும், நிர்வாக அதிகாரி இராமதுரை, அர்ச்சகர் முதலியோரும்

வரவேற்று உடனிருந்து வழிபாட்டையும், ஆண்டு நிறைவுப் பிரசாரத்தையும் சிறப்பாக நடத்திவைத்தனர். வழிபாட்டின் பின்னர் அனுபூதி மண்டபத்தில் "வழிபாட்டுக் குழுவின் நான்காவதாண்டு நிறைவுவிழா" சென்னை மாநில அறநிலையத் துறை ஆணையாளர் திரு. M. S. சாரங்கபாணி முதலியார் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. திரு. S. இராமகிருஷ்ண முதலியார் விழாவைத் தொடக்கிவைத்து தேவஸ்தானச் சார்பில் தலைவர், பேச்சாளர்கட்கு மலர்மாலை சூட்டினர்கள். தலைவர், தமது தலைமையுரையில், மக்களிடையே தெய்வபக்தி பரவவும், கட்டுப்பாடு வளரவும், ஒற்றுமை உணர்ச்சி வளரவும் கூட்டுவழிபாடு மிகவும் அவசியமென்றும், இந்நாளில் இது பல இடங்களில் நடந்துவருவதைக் கண்டு மகிழ்ச்சி அடைகிறேன். வழிபாடு நடத்துவோர் அவ்வத்தலங்களின் வரலாறுகளையும், வழிபாட்டு முறைகளையும் மக்களுக்கு நன்கு விளக்கவேண்டும் என்றும், முக்கியமாக சண்டிகேசுவரர் வழிபாடுபற்றி விளக்க வேண்டியது அவசியம் என்றும், தருமபுர ஆதீன சமயப் பிரசார நிலைய மாதாந்தர வழிபாட்டுக் குழுவினர் நல்ல முறையில் வழிபாடும், சமயப் பிரசாரமும் நடத்திவருகின்றனர். இவர்கள் வழிபடச் சென்றதன் காரணமாகத்தான் குரங்கணில்முட்டம் திருக்கோயில் திருப்பணி நடைபெற்றுவருகிறது. குழுவினரை இயக்கிவரும் தம்பிரான் சுவாமிகள் யாத்திரை அனுபவங்களை அவ்வப்போது என்னிடம் சொல்லும்போது, மக்கள் நிலையும், கோயில்களின் நிலையும், சமய நிலையும் வளர்வதும் தளர்வதும் தெரிந்துகொள்வேன் என்றும் குறிப்பிட்டார்கள். திரு. T. புருஷோத்தமன், திரு. நல். முருகேச முதலியார், புலவர். திரு. N. R. முருகவேள் ஆகியோர் திருக்கோயில் வழிபாடு நடத்த வேண்டிய முறைபற்றியும், வழிபாட்டுக்குழுவினருக்கு அரசாங்கம் போக்குவரத்துச் சலுகை கொடுக்கவேண்டுமென்றும் குறிப்பிட்டுப் பேசினர்கள்.

ஸ்ரீமத். சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் வரவேற்புரையும், நன்றியுரையும் கூறுகையில், நான்காண்டுகளில் தொண்டை நாடு, நடுநாடு, வடபாண்டியநாடு ஆகியவற்றில் உள்ள பாடல்பெற்ற தலங்களை வழிபட்டதோடு தக்க சமயப்பிரசாரமும் செய்துள்ளது என்றும், குழுவில் உள்ள அனைவரும் சைவ உண்மைகளைத் தெரிந்து கொண்டதோடு, வாழ்விலும் கடைப்பிடித்து வருகின்றனர் என்றும், குறிப்பிட்டு ஆங்காங்கும் உதவி புரிந்த அறங்காவலர்கள், நிர்வாகிகள் ஆகியோருக்கு நன்றி தெரிவித்தார்கள். திரு. கருப்பண்ண முதலியார், திரு. T. இராமலிங்க அப்பா, திரு. P. செல்வநாத செட்டியார்,

திரு வேணுகோபால் நாயுடு முதலியோர் குழுவினருக்குச் சிற்றுண்டி அளித்து உபசரித்தனர். திரு. P. சுவாமிநாதன் ஒவ்வொரு சந்நிதியிலும், தேவாரம் முதலிய பக்திப்பாடல்களை ஓதி மகிழ்வித்தார்.

## வைத்தீஸ்வரன்கோயில் கிருத்திகைப் பிரசாதம் வழங்கும் விழா

சென்னை சமயப்பிரசார நிலைய அன்பர்களும், வேளூர்க் கிருத்திகைப் பிரசாதம் பெறும் உறுப்பினர்களுமான தொண்டர்கள் சார்பில் 25—4—63 கிருத்திகையன்று வேளூர் ஸ்ரீ செல்வ முத்துக்குமார சுவாமிக்கும் ஸ்ரீ தையல்நாயகி சமேத ஸ்ரீ வைத்திய நாதசுவாமிக்கும் அபிஷேகம் அர்ச்சனை செய்த சந்தனக்குழம்பும் அருட்பிரசாதங்களும் 26—4—63 மாலை 7-மணிக்கு நிலையத்தில் மணலி திரு. S. இராமகிருஷ்ண முதலியார் அவர்கள் தலைமையில் பிரார்த்தனை நிகழ்த்தி வழங்கப்பட்டது. திரு. P. சுவாமிநாதன் வேளூர்த் தேவாரம், திருப்புகழ் பிள்ளைத்தமிழ் முதலிய அருட்பாடல்களை இசையுடன் ஓதிப் பிரார்த்தனை நிகழ்த்தினர். ஸ்ரீமத் சோமசுந்தரத்தம்பிரான் சுவாமிகள் வரவேற்புரையும், நன்றியும் கூறினர்கள், அன்பர்களும் உறுப்பினர்களும் அருட்பிரசாதம் பெற்றுச் சென்றனர்.

## ஆங்கிலத் திருக்குறள் ஆசிரியருக்குப் பாராட்டு

திருவாசகத்தை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துப் பெரும் புகழ்கொண்ட திருவாசகமணி கே. எம். பாலசுப்ரமண்யம், இப்பொழுது திருக்குறளையும் ஆங்கிலம் கூறும் அகில உலகிற்கு அளித்துத் திருக்குறள் மணியாகத் திகழ்கிருர்.

அரிய முறையில் மிகவும் சிறப்பாக இயற்றப் பெற்ற இந்த மொழிபெயர்ப்பு ஆங்கிலச் செய்யுள் வடிவிலேயே அமைந்திருக்கும் சீர்த்தியையும் நேர்த்தியையும், வெளியிட்டு விழாவிற் பங்குகொண்ட நாவலர், பாவலர், புரவலர் யாவரும் ஒருங்கே பாராட்டினர். வட சென்னையில் விளங்கும் சென்னை மல்லேஸ்வரர் சந்நிதியில் சென்றவாரம் நடைபெற்ற வெளியீட்டு விழாவில் திரளான பேரறிஞர் நடுவே குறளை ஆங்கிலக் கவிதைகளாக இயற்றியுள்ள திருவாசகமணிக்கு, மணலி அறக் கட்டளை சார்பாக திருக்குறள் மணி என்ற விருதினையளித்துப் பொன்னுடை போர்த்திச் சிறப்புறச் செய்தார், தமிழக சட்ட மன்ற நாயகர் செல்லபாண்டியன்.

சென்னை உயர்நீதிமன்றத் தலைமை நீதியரசர் இராமச்சந்திர அய்யர் அவர்கள் விழாவுக்குத் தலைமைதாங்கி மொழிபெயர்ப்பின் சிறப்பினை வியந்து பாராட்டினர். கல்வி அமைச்சர் பக்தவத் சலம், திருக்குறள் சிறந்ததொரு உலகநூல் என்பதை அகிலம் அறியுமெனினும், இந்த மொழிபெயர்ப்பின் விளைவாக, குறளின் கீர்த்தியை மேலும் நன்குணர்ந்து போற்றுமென்றும் கூறி, இது வெறும் மொழிபெயர்ப்பாக அன்றி ஆங்கிலத்தில் இயற்றப் பட்ட மூல நூல்போன்ற சிறப்புடன் விளங்குகிறதென்றும் பாராட்டி நூலை வெளியிட்டு ஆசிரியருக்கு மைலைக் கபாலீசுவர ஆலய தர்மகர்த்தர் அய்யா சுப்பிரமணிய முதலியார் சார்பாகப் பொன்னுடை போர்த்தினர். தருமையாதீனத்தின் பிரசாதமும் பொன்னுடையும் தவத்திரு சோமசுந்தரத்தம்பிரான் அவர்கள் வழங்கி ஆசீர்வதித்தார்.

மற்றும் டாக்டர் மு. வரதராசனர், சுத்தானந்த பாரதி, வித்துவான் முத்துக்கண்ணப்பா, ஆகியோர் பாராட்டுரை வழங் கினர். தொடக்கத்தில் அறநிலைய ஆணையர் எம். எஸ். சாரங்க பாணி முதலியார் வரவேற்புரை கூறினர். உதவி ஆணையர் இராமலிங்க ரெட்டி நன்றி பகர்ந்தார்.

ஆசிரியர் கே. எம். பாலசுப்ரமண்யம் தக்கவாறு விடை யளித்துத் தமது மகிழ்ச்சியையும் நன்றியையும் சம்பந்தப்பட்ட அனைவர்க்கும் தெரிவித்துக்கொண்டார். நூலை அழகுற அச்சிட் டுதவிய திருச்சி யுனைடெட் பிரிண்டர்ஸ் அதிபர் து. சிவஞானம் அவர்களுக்கு அமைச்சர் பட்டாடை போர்த்திப் பாராட்டினர்.

(சிவாஜி சித்திரை மலர் 1963.)

## மதிப்புரை

சென்னைச் சிவனடியார் திருக்கூட்டத்தினரால் வெளியிடப் படுவது "சைவம்" என்னும் திங்கள் வெளியீடு. திரு. அழக ரடிகளை ஆசிரியராகக் கொண்டது. ஆண்டுச்சந்தா ரூ. 3.

இது சைவசமய வளர்ச்சிக்குப் பலவகையாலும் பணிபுரிவது. இதன் இரண்டாம் ஆண்டின் முதல் இதழ் எங்கள் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகாசந்நிதானத்தின் அருளாசியைப் பெற்றுத் திகழ் கின்றது. பல சைவ மெய்யன்பர்களின் கட்டுரைகளும் இடம் பெறுகின்றன. இதனைச் சைவ அன்பர்கள் பெற்றுப் பயனுறு வார்களாக. வேண்டுவோர் கீழ்க்காணும் முகவரிக்கு எழுதிப் பெறலாம். M. R. சம்பந்தம், c/o. R. தாஸன் ஸ்டுடியோ, 49-ரெட்டன்பஜார், சென்னை-3.

— சி. அருணைவடிவேல் முதலியார்.

ஆங்கிலத்தில் திருக்குறளை மொழிபெயர்த்த
திருவாசகமணி.
திரு. K. M. பாலசுப்பிரமணியம் B. A., B. L., அவர்களுக்கு



வித்துவான். ஸ்ரீமத். சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்
தருமையாதீனத்தின் சார்பில்
ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி அவர்களின்
அருளாசியை வழங்கிப் பொன்னாடை போர்த்துதல்.

இராமேஸ்வரத்தில்



தருமையாதீனம்
ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி அவர்களும், அன்பர்களும்,

# எதிர்காலம்

திரு. கே. முத்துஜோதிடர்

( சோபகிருதுஸு வைகாசிமீ 1உ முதல் 31உ முடிய )

( 15—5—63 முதல் 14—6—63 முடிய )

**1. மேஷம். அசுவதி - பரணி - கார்த்திகை ¼**

அசுவதி நான்கு பாதங்களும் மிசிர பலனைத்தரும். வீண் அலைச்சல்கள் ஏற்படச் செய்யும். மனம் சஞ்சலமடையும். பரணி நான்கு பாதங்களும், கார்த்திகை முதல் பாதமும் சுபம்தரும். வித்தியா விருத்தியாகும். உன்னத பதவிகளைத் தரும். தெய்வ பலம் பிரகாசிக்கும். புதன் வியாழன் சுபமாகும்.

**2. ரிஷபம். கார்த்திகை ¾ - ரோஹிணி - மிருகசீரிஷம் ½.**

விருஷப ராசி ஒன்பது பாதங்களும் ஜயத்தை உண்டு பண்ணும். துவீபாந்தர சுப சமாசாரத்தால் சந்தோஷமுண்டு பண்ணும். கீர்த்திபத்திரம் கிடைக்கச்செய்யும். ஆப்த நண்பர்களால் வெகுகாலமாய் நடவாத காரியங்கள் நடைபெறும். சனி, செவ்வாய்சுபமாகும்.

**3. மிதுனம். மிருகசீரிஷம் ½ - திருவாதிரை - புனர்பூசம் ¾.**

மிதுனராசி 9 பாதங்களும், சுபத்தைத்தரும். மாத மத்தியில் சிற்சில மாறுதல்களைக்காட்டும். தொழில் ஓங்கும். நஷ்டமான பொருள் கொஞ்சம் கிடைக்கும். சத்துருக்கள் ஓங்கி மாதக்கடைசியில் சரணமடைவார்கள். காரியங்கள் தாமதத்தோடு நடைபெறும். திங்கள் புதன் சுபமாகும்.

**4. கடகம். புனர்பூசம் ¼ - பூசம் - ஆயில்யம்.**

கடகராசி 9 பாதங்களும் மகோன்னத பதவிகளைத்தரும். வித்தியா விருத்தியாகும். விவகாரம் ஜயிக்கும். நஷ்டமான பொருள்கள் வந்துசேரும். தெய்வபலம் முன்னிற்கும். உலக

பிரக்யாதியைத்தரும். ஆரோக்கியமுண்டுபண்ணும். சனி, வியாழன் சுபமாகும்.

5. சிம்மம். மகம் - பூரம் - உத்திரம் $\frac{1}{4}$

சிம்மராசி 9 பாதங்களும் சந்தோஷத்தை உண்டுபண்ணும். ஜீவன லாபம் அதிகரிக்கும். மேலோர் பெரியோர் அன்பு கிடைக்கச்செய்யும். அபவாதம் நீங்கும். சுபாதிகள் ஏற்படும். பந்துமித்திரர்களால் உபகாரம் நீடிக்கச்செய்யும். கீர்த்திபத்திரம் கிடைக்கும். சனி, ஞாயிறு சுபமாகும்.

6. கன்னி. உத்திரம் $\frac{3}{4}$ - ஹஸ்தம் - சித்திரை $\frac{1}{2}$

கன்னியாராசி 9 பாதங்களும் என்றும் பார்த்திராத அற்புதமான தெய்விகத் தோற்றங்களை உண்டுபண்ணும். உலக பிரக்கியாதியைத் தரும். சத்துருக்கள் ஓடி விடுவார்கள். அசாத்தியமெல்லாம் சுலப சாத்தியமாகும். குடும்பம் ஓங்கும். புத்திராதிகளால் நன்மை உண்டாகும். வம்சாவிருத்தியைத்தரும். சந்தோஷமுண்டுபண்ணும். புதன், வியாழன் சுபமாகும்.

7. துலாம் சித்திரை $\frac{1}{2}$, சுவாதி விசாகம் $\frac{3}{4}$.

சித்திரை 3, 4 பாதங்கள் கவலை உண்டுபண்ணும். சகல காரியங்களும் தவக்கப்படும். நஷ்டமுண்டாகும். சுவாதி 4 பாதங்களும் சுபத்தைத்தரும். ஆரோக்கியமுண்டுபண்ணும். உலக பிரகியாதியைத்தரும். தனதான்ய விருத்தியாகும். விசாகம் 1, 2, 3 பாதங்கள் கவலையோடு நடக்கச்செய்யும். விரோதிகளால் பயமுண்டுபண்ணும். தொழில் மந்தம் காட்டும். சதா அலைச்சல் ஏற்படச்செய்யும். புதன், சனி சுபமாகும்.

8. விருச்சிகம். விசாகம் $\frac{1}{4}$ - அனுஷம் - கேட்டை.

விசாகம் 4-ம் பாதமும் அனுஷம் பூராவும் கவலை காட்டும், குடும்ப கலகமும் நஷ்டமும் உண்டுபண்ணும். கேட்டை 4 பாதங்களும் சுபத்தைத்தரும். உயர் பதவிகள் ஏற்படும். நஷ்டமான பொருள் வந்து சேரும். வியாழன், வெள்ளி சுபமாகும்.

9. தனுசு. மூலம் - பூராடம் - உத்திராடம் $\frac{1}{4}$

தனுர்ராசி 9 பாதங்களும் உலகப் பிரசித்தியைத் தரும். ஜீவன லாபம் ஏற்படும். வித்யா விருத்தியாகும். குடும்பம் ஓங்கும். ஸ்தாவர ஜங்கம சொத்துக்கள் சேரும். சந்தோஷம் உண்டு பண்ணும். சனி, செவ்வாய் சுபமாகும்.

10. மகரம். உத்திராடம் ¾ - திருவோணம் - அவிட்டம் ½

மகரராசி 9 பாதங்களும், உத்யோக உயர்வு உண்டு பண்ணும். மேலோர் பெரியோர் அன்பு கிடைக்கும். ஆரோக்கியம் தரும். புத்திர விருத்தியாகும். கிரயவிக்ரயங்கள் ஓங்கும். தைவபலம் பிரகாசிக்கும். வியாழன், வெள்ளி சுபமாகும்.

11. கும்பம். அவிட்டம் ½ - சதயம் - பூரட்டாதி ¾.

கும்பராசி 9 பாதங்களும் மகோந்நதமான பதவிகளைத்தரும். ஸ்தாவர ஜங்கம சொத்துக்களைத் தரும். சகல காரியமும் வெற்றியடையும். குடும்பம் தழைக்கும். நல்ல கீர்த்தியைத் தரும். சனி, ஞாயிறு சுபமாகும்.

12. மீனம். பூரட்டாதி ¼ - உத்திரட்டாதி - ரேவதி.

மீனராசி 9 பாதங்களும் தெய்வத்தின் தோற்றத்தோடு பிரகாசிக்கச் செய்யும். எங்கும் நிறைந்த கீர்த்தி ஏற்படச் செய்யும். துரோகிகள், சத்துருக்கள் தானகவே ஓடிவிடுவார்கள். ஆரோக்கியமுண்டாகும். தொழில் ஓங்கும். கீர்த்தி பத்திரம் கிடைக்கச் செய்யும். புத்திராதிகளால் சுகமுண்டாகும். தெய்வம் முன்நின்று காக்கும். வியாழன், வெள்ளி சுபமுண்டாகும்.

குறிப்பு :— உலகில் சாந்தி நிலவும். ஹிமாலய பிரதேசத்திலும், வடகிழக்கு துவிபாந்தரத்திலும் அற்புதச் செயல்கள் ஏற்படச்செய்யும். பாதர பூமியில் வடதேசத்தில் அடிக்கடி இயற்கைகள் மாறும். தென்தேசம் செழிக்கும். உஷ்ண அதிகத்தால் எங்கும் வியாதி பயம் ஏற்படச்செய்யும். பாரத பூமிக்கு சத்துருக்களால் பயம் இருந்துகொண்டே இருக்கும். ஆனாலும் மாதக்கடைசிக்குள் ஹிமாலயத்திலுள்ள சத்துருக்கள் தனக்குள்ளேயே பேதபுத்தியை உண்டாக்கிக்கொண்டு ஒருவருக்கொருவர் நம்பிக்கை இல்லாமல் மடிவார்கள். தென்தேசமெங்கும் தர்மதேவதை சாந்நித்தியமடைந்து உலகை காக்கும். எங்கும் மகாஜனங்கள் ஆஸ்திகத்தோடும், சத்புத்தியோடும் இருந்துகொண்டு, ஒவ்வொரு கிராமம் நகரம் தோறும் தெய்வீக வழிபாடுகளைச் செய்துகொண்டும் லக்ஷம்கோடி அர்ச்சனைகள் ஹோமங்கள் நடத்திக்கொண்டுவர பயம் பூராவாக நீங்கி சுபமுண்டாகும். துர்பிக்ஷம் நீங்கும். தனதான்ய விருத்தி ஏற்படும். ராஜாங்கம் செழிக்கும். சுபம்.

# EXTRACT FROM THE VISITORS' BOOK

## Dharmapuram Adhinam

## Sri Vaithinathaswami Devasthanam, Vaithisvarankoil.

I have been very much impressed with the temple and felt like spending more hours forgetting the outside world.

(Sd.) V. Subramaniam,
26—2—63.

Delighted to visit this ancient temple of great repute which is maintained with all its pristine purity.

(Sd.) C. Ramados,
10—3—63. Sub collector, Chingleput

I had the good fortune of visiting the Vythiswarankoil along with the prisident and other member of the Young Mens Indian League. The first impression has been remarkable. The temple (by itself a magnificient one) is being excellently maintained. The pooja followed by a devout song nicely rendered leaves a lasting impression in our minds. The attention which our Association has received, has left nothing to be desired. On the whole the trip has been memorable and our thanks are due to the persons at the helm of affairs for the success of our visit.

(Sd.) K. Srinivasan.
20—4—63. Vice-president, Y. M. I. L

தருமபுரம் ஆதீனத்தின் ஆட்சிக்குட்பட்டுள்ள வைத்தீசுவரன் கோயிலைத் தரிசிக்கும் பெரும்பேறு எனக்கு இன்று கிடைத்தது. கோயில் நிர்வாகம், கோயிலின் தரிசன அமைப்புமுறை எல்லாமே மிகச் சிறந்த தரத்தில் அமைந்திருப்பதைக் கண்டு பெருமை அடைந்தேன். தமிழும் சைவமும் தழைத்தோங்கச் செங்கோல் புரியும் 25-வது குருமகாசந்நிதானத்தின் அருளாட்சித்திறம் கண்டு நானும் என் நண்பர்களும் மிக மகிழ்ந்தோம். ஒவ்வொரு சந்நிதியிலும் ஓதுவார்கள் இசைத்த தீந்தமிழ்ப்பாடல்கள் அமுத வெள்ளமாய் உணர்ச்சிப் பிழம்பாய் ஒலித்து மனத்தில் ஒரு கிளுகிளுப்பை ஏற்படுத்தின. வாழ்க ஆதீனத்தின் தவத் திருப்பணி.

(ஒ-ம்) கே. ஆர். கல்யாணராமன்,
20—4—63. "மகரம்"

அரியநூல் வெளியீடு :

# திருக்குறள் - கருத்துரை

[ பழனியங்கிரியார் எழுதியது ]

## 18. வெஃகாமை தீது

வெஃகாமையாவது பிறர் வாழ்வுகண்டு அந்த பாக்கியம் நமக்கு ஆகப்பெற்றதில்லையென்று மனத்தில் எண்ணுமலிருப்ப தொன்று.

முறைவைப்பு :- நடுவின்றி, இறலீனும், படுபயன் வெஃகி, சிற்றின்பம்வெஃகி, இலமென்று, அருள்வெஃகி, அஃகாமை, அறனறிந்து, வேண்டற்க, அஃகியகன்ற.

நடுநிலைமையை விட்டுப் பாமர வாழ்வை விரும்புவானகில் குடிகெட்டு மிடியனுகிக் குற்றமாம். (1)

கேடாகிய விதனத்தைக் கொடுக்கும், பிறர் வாழ்வை ஆசைப் படுவானகில். அதன்றியில் போன சென்மாந்தரத்திலே விட்ட தற்குத் தக்கதாகக் கூறப்படுமென்று எண்ணுவானகில் திருமாது வெற்றியைத் தரும். (2)

செல்வத்தாலே வரும் பயனை நாடித் தன்மம் அல்லாத காரியத்தைச் செய்யார் நடுநிலைமையை உறுதியாகப் பிடித்தவர்.

அழிகின்ற சிற்றின்பத்தை யாசைப்பட்டு மறுமைக்கும் முத்தி தருகின்ற தன்மத்தை விடார் பரலோகத்தை இச்சிப்பவர். (4)

வறுவியம் என்று பாவத்தைச் செய்யார் மறுமைக்கு வறுமை யாம் என்று வெஃகாமையுடையவர். (5)

முத்தியை விரும்பித் தன்மநெறியிலே நின்றார் பொன் ஞசையை விரும்பி மனத்தில் அழுக்குடையார் ஆகில் கெடுவான்.

தன்னுடைய செல்வம் குறையாமலே வேண்டுமாகில் பிறர் பாக்கியத்தினை விரும்பாதொழிக. (7)

தன்மத்தின் நெறியை யறிந்து பிறர் செல்வத்தை விரும்பா னுகில் திருமாது வீற்றிருக்கும். (8)

தனக்கு வேண்டின மருவாதி செல்வத்தை விரும்புவானுகில் அறமும் தருமமும் முத்தியும் தரும். (9)

குறையாமல் நிறைந்த......தாம் பிறர் செல்வத்தை விரும்பிய பாவத்தைப் போதருவானுகில். (10)

## 19. புறங்கூருமை

புறங்கூருமையாவது ஒரு குற்றத்தையும் புறஞ்சொல்லாமலிருத்தல்.

முறைவைப்பு : அறங்கூருன், அறனழியல்லவை, அறஞ்சொல்லும், அறனேக்கி, பகச்சொல்லி, துன்னியர் குற்றம், ஏதிலார், பிறன்பழி, புறங்கூறி, கண்ணின்ற.

புண்ணியத்தின்வழியைப் பேசான் பாவமே செய்வானுகிலும் ஈடேறுவான் ஒருவன் குற்றத்தைப் புறஞ்சொல்லாதிருப்பன். (1)

தன்மத்தை யழித்துப் பாவத்தைச் செய்கிறதுக்கொக்கும் ஒருவன் குற்றத்தைப் புறங்கூறுதல். (2)

தன்மநெறி சொல்லுகின்ற மனத்தான் நன்மை யொருவன் குற்றத்தைப் புறஞ்சொல்லாமல் இருப்பானுகில் நன்று. (3)

ஒருவன் குற்றத்தைப் புறஞ்சொல்பவனை பூமி தன்மத்தைப் பார்த்துப் பாதுகாக்கும் அல்லது பூமி யவனைத் தாங்காது. (4)

முரண்டு மொருமனமாகக் கூடியிருக்கிற சினேகத்தைப் புறஞ்சொல்லிப் பிரித்துவிடுவாரென்னில் முரண்டு பெருக்கும் மனம் பிரியப்படச் சொல்லி உறவு பண்ணவறியாதான். (5)

ஒருவர் குற்றத்தைப் புறஞ்சொல்லித் திரிவார் தங்களை வேண்டாதார் முன் எப்படியாவரோ வென்னில் பலர்க்கு வேண்டாதார். (6)

தாளுெரு குற்றத்தை யாவர்க்கும் வேண்டாதார் முன்னே சொல்லுவதுபோலத் தனக்கு வேண்டாதாருந்தன் குற்றத்தைச் சொல்லுவரென்றறிவனுகில் அவனுக்கு ஒரு குற்றமுமில்லை. (7)

ஒருவன் குற்றத்தைப் புறஞ்சொல்லுவான் தன் குற்றத்தையும் விசாரித்துச் சொல்லவேணும். (8)

ஒருவன் குற்றத்தை யவர்க்கு வேண்டாதார் முன்கூடப் புறஞ் சொல்லியதினலே பிரயோசனப்பட்டு வயறு வளர்ப்பதில் சாகுதல் நன்று. (9)

ஒருவர் முகம்பாத்து தெ......ஞ்சொல்லுவது நன்று அவனைக் காணுதவிடத்திலே புறஞ்சொல்லல் ஒண்ணுது. (10)

## 20. பயனில சொல்லாமை

பயனில சொல்லாமையாவது வீண் வார்த்தை சொல்லாமல் பயனுள்ள வார்த்தை சொல்லுக என்றவாறு.

முறைவைப்பு :- பல்லார்முனிய, நயனில, நயன் சாரா, சீர்மைசிறப், அரும்பயன், பொருடீர்ந்த, பயன், சொல்லுக, நயனில, பயனில்சொல்.

தனக்கு வேண்டாதாரிகழும்படியாகப் பயனில சொல்வானைத் தனக்கு வேண்டின பேரும் வேண்டாத பேரும் இகழ்வர். (1)

நயமில்லாதவனென்று சொல்லப்படும் பயனில்லாதவார்த்தை எல்லார்க்குஞ் சொல்லுவான். (2)

நயஞ்சேராமல் திருமாது போம். பயனில்லாதவார்த்தையை சொல்லுவானிடத்து. (3)

ஒழுக்கமும் - செல்வமுங் கெடும் பயனில்லாத வார்த்தையை நல்லோர்முன் சொல்வது. (4)

அரியநூல் ஆராய்ந்து அறிவுடைமையை யுள்ளார் பயனில் லாதசொல் சொல்லார். (5)

விளையாட்டிலும் பயனில்லாத வார்த்தையைச் சொல்லார். தெளிந்த மனத்தினர். (6)

பயனில்லாத வார்த்தையை நல்லோர்முன் சொல்லுதல் நயமில்லாத வார்த்தையைச் செற்றுரிடத்திற்றீது செய்தற்கு ஒக்கும். (7)

சொல்லும்போது பயனுள்ளதைச் சொல்லுக அல்லாது பயனில்லாதசொல் சொலல் வேண்டாம். (8)

நயமில்லாத வெட்டையான வார்த்தை சொன்னுலும் பயனில்லாத வார்த்தையைச் சொல்லுவான். (9)

பயனில்லாத சொல்லை நல்லோர்முன் பாராட்டுவானை மனித்தரென்பது நெல்லினுடன் பிறத்த பதர் போலும். (10)

# 21. தீவினையச்சம் நன்று

தீவினையச்சமாவது விளக்கினற்குற்றம் புறங்கூறல் பயனில சொல்லுதல்போல மனத்துக்கும் பாவத்தையெண்ணப் பயப்பட வேணும்.

முறைவைப்பு :- தீவினையார், அறிவினுள், அருங் கேடன், தீயவைதீய, தீயவை செய்தார், எனைப்பகை, தன்னைத்தான், தீப்பால, இலமென்று, மறந்தும் பிறன் கேடு.

சென்மாந்திரத்திலே பாவிகள் பாவத்துக்குப் பயப்பட மாட்டார்கள். புண்ணிய சிந்தையரான பேர் பயப்படுவர். (1)

அறிவுள்ளதற்கெல்லாந் தலைமையான காரியமென்க. தனக்கு வேண்டாதார்க்கும் வினையெண்ணுமலிருப்பது. (2)

கேட்டுமபாயத்துக்குமுள்ள......யிவனென்று அறியப்படும். வாக்கினுலுங் காயத்தினுலும் மனத்தினுலும் பாவத்தை யறியா தான். (3)

பாவம் பாவத்தையே விளைவித்தலால் பாவத்தை நெருப்பி லும் பெரியதென்றறிக. அதெப்படியென்ருல் நெருப்புவேண்டச் சுடமாட்டாது. பாவம்..... சுட்டும் பொரும். (4)

பாவஞ் செய்தாரை யந்தப்பாவஞ் சுற்றிநிற்கும். அதே தென்னில் நிழல்தன்னைவிட்டு நீங்காத முறைமைபோல், (5)

ஊருடன் பகைகொண்டாலும் நற்குணத்திலே யுறவுபண் ணிக்கொள்ளலாம். தீவினை பகைவிடாமல் நின்றுகெடுக்கும். (6)

தன்னைத்தான் பிரியமுள்ளவனுகில் பாவமான காரியத்தைச் செய்வானல்லன். அதெப்படியென்ருல், தான்செய்த பாவந் தன் ஆன்மாவை வருத்தும். (7)

தன் ஆன்மாச் சுகவ்யாபியாயிருக்கவேணுமாகில் வேருெரு ஆன்மாவை வருத்தம் செய்யாதொழிக. (8)

வறியோம் என்று பாவமான காரியத்தைச் செய்து பொருள் தேடவேண்டா. தேடின் பொருளும் நில்லாது. மறுமைக்கு வறியனும். (9)

மறந்தும் ஒருவர்பால் பொல்லாங்கு செய்வானல்லனை அப்படிச் செய்தால் அதன்மம் தனக்குக் கேடு விளைக்கும். (10)

( தொடரும் )

... சொந்தமான

சீகாழி ஸ்ரீ சட்டைநாத சுவாமி தேவஸ்தானத்தில்

திருமுலைப்பால் திருநாள் (29—4—63)



அன்பர்கள் நிவேதனத்திற்குப் பால் கொண்டு வந்து தரும் காட்சி.

---

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனத்துக்குச் சொந்தமான

## திருப்புள்ளிருக்குவேளூர் என்னும் வைத்தீஸ்வரன்கோயில்

### ஸ்ரீ செல்வமுத்துக்குமாரசுவாமி கிருத்திகா நக்ஷத்திர

### சோபகிருதுவருஷ அபிஷேகம்

| | | | |
|---|---|---|---|
| வைகாசி | 9உ | 23—5—63 | வியாழக்கிழமை |
| ஆனி | 5உ | 19—6—63 | புதன்கிழமை<br>(மண்டலாபிஷேக கிருத்திகை |
| ஆனி | 32உ | 16—7—63 | செவ்வாய்க்கிழமை |
| ஆடி | 28உ | 13—8—63 | செவ்வாய்க்கிழமை |
| ஆவணி | 24உ | 9—9—63 | திங்கட்கிழமை |
| புரட்டாசி | 20உ | 6—10—63 | ஞாயிற்றுக்கிழமை |
| ஐப்பசி | 17உ | 3—11—63 | ஞாயிற்றுக்கிழமை |
| கார்த்திகை | 14உ | 30-11—63 | சனிக்கிழமை |
| மார்கழி | 12உ | 27-12—63 | வெள்ளிக்கிழமை |
| தை | 11உ | 24—1—64 | வெள்ளிக்கிழமை |
| மாசி | 8உ | 20—2—64 | வியாழக்கிழமை |
| பங்குனி | 5உ | 18—3—64 | புதன்கிழமை |

உ

சென்னை, தருமையாதீன மடாலய தேவாலய சமயப் பிரசார நிலைய வழிபாட்டுக் குழுவினரின்

# தென்பாண்டி நாட்டுத் தலயாத்திரை

சென்னை, தருமபுர ஆதீன மடாலய தேவாலய சமயப்பிரசாரநிலைய வழிபாட்டுக் குழுவினர் 19-5-63 முதல் 26-5-63 வரை தென்பாண்டி நாட்டில் உள்ள மதுரை, திருச்சுழியல், திருச்செந்தூர், ஸ்ரீ வைகுண்டம், ஆழ்வார் திருநகரி, திருநெல்வேலி, வானமாமலை, நாங்குநேரி, கன்னியாகுமரி, சுசீந்திரம், நாகர்கோயில், திருவனந்தபுரம், வர்க்கலை, குமாரகோயில் (ஏரகம்) தென்காசி, திருக்குற்றாலம், இலஞ்சி, அயனீச்சரம், அத்தீச்சரம், (சிவசைலம்) அக்கீச்சரம், பாபவிநாசம், விக்கிரமசிங்கபுரம், சங்கரன்கோயில், கழுகுமலை, கரிவலம்வந்தநல்லூர், ஸ்ரீவில்லிபுத்தூர் முதலிய சிவதலங்களில் வழிபாடும் சமயப்பிரசாரமும் நிகழ்த்துவர்.

Printed & Published by K. Sundaresa Iyer. Agent, Dharmapuram Adhinam at the Gnanasambandam press, Dharmapuram (Mayuram) 10-5-63.